# தேவி தரிசனம்

## சோட்டாணிக்கரை பகவதி




பொன். பாஸ்கரமார்த்தாண்டன்






அம்பாள் பதிப்பகம்
48, ராமநாயக்கன் தெரு
நுங்கம்பாக்கம்
சென்னை-34

முதற்பதிப்பு : மே, 1982.


தாமரை மணாளன் தயாரிப்பு

---

அட்டையை அலங்கரிக்கும்
ஸ்ரீ சோட்டாணிக்கரை பகவதியின்
வண்ணத் திருவுருவத்தை
வரைந்து உதவியவர்
ஓவியர் மணிவேல்

விலை ரூ : 4-00

---

அச்சிட்டோர் :
அன்னை அஞ்சுகம் அச்சகம்,
இராயப்பேட்டை
சென்னை-600014.

3-3

# 1

'வாட்டும் வினைய கற்றி வாழ்வளித்து ரட்சிக்க
சோட்டாணிக்கரை மலர்ந்த ஜோதி பகவதியே'

கேட்கிறதா அந்த ஜீவகீதம் உங்கள் செவிகளுக்கு?

பார்புகழ் பரசுராம தேசமாம் கேரளத் திருநாடெங்கும் முழங்கி எதிரொலிக்கும் அந்தத் தீனர்களின் அபயக் குரல் உங்கள் காதுகளில் விழுகிறதா?

விண்ணும்—மண்ணும் ஆர்த்தெழுந்து போற்றி செய்யும் அந்தப் புனித நாமாவளி கேட்கிலேயா, கேளிரே.

'அம்மே நாராயணு, தேவி நாராயணு'

'பத்ரே நாராயணு, லட்சுமி நாராயணு'

'அம்மே பகவதி, அச்சா நாராயணு'

எங்கிருந்து எழுகிறது இந்தக் குரல்? ஜீவன்களை சிலிர்த்தெழச் செய்யும் இந்தப் பரவசப் பெருங்கீத முழக்கம் செய்யும் திருநாடு எது?

நெருப்பும், நீரும் சங்கமித்து ஒளிரும் அற்புதம் எங்கே நடக்கிறதோ,

—உக்கிரமும் கருணையும் ஒருங்கிணைந்து எங்கே மின்னுகிறதோ,

—ஞானமும் பொருளும் கலந்து எங்கே அமுதப் பிரவாகமாகப் பொங்கி நிற்கிறதோ.

அதுதான் கேரளாவிலுள்ள கொச்சி நகருக்கு சுமார் பன்னிரண்டு மைல் தொலைவிலுள்ள புண்ணியதிருத்தலமான சோட்டாணிக்கரை பகவதி அம்மன் ஆலயம்.

முத்தேவியும் ஓரம்சமாய், ஞானக் கருணையாய் அன்னை பகவதி முகிழ்த்து நின்று அருள் வழங்கும் அந்தத் திருத் தலத்தில் நித்தம் நித்தம் நடக்கும் அற்புதங்கள் எத்தனை எத்தனை......

நேற்றைய நிகழ்ச்சிகளால் அந்த நிலம் மணக்கும் அருள் வரலாறுகள் எத்தனை...எத்தனை...

மாயையும், மறமும் மலியாவண்ணம் அந்த பரசுராம தேசத்தை புரந்தருள் புரிய, மகாலட்சுமியும், நாராயணரும் சுயம்புவாய் எழுந்தருளிய மகிமையைத் தான் சொல்லும் திறனுண்டா நமக்கு...?

அதிசங்கரரான பகவத் பாதாள் அருட்தவம் இயற்றி அன்னை சாமுண்டிஸ்வரியிடம் வேண்டிய ஒரு வரத்தால் இந்தச் சோட்டானிக்கரைத் தலத்தில் மைசூர் மூகாம் பிகையே உஷத் காலத்தில் அருளிருக்கை கொண்டிருக்கும் அற்புத வரலாற்றைத்தான் விவரிக்க சக்தியுண்டா நமக்கு...?

பில்லி சூன்யம், பித்தம், ஏவல் போன்ற பிணிகளையும் அகற்ற நித்தம் நித்தம் அன்னை பகவதி உக்கிராவேசம் கொண்டு குருதித் திருவிளையாடல் நிகழ்த்தி, அவள் சந்நிதியில் கூடும் கோடானு கோடி மக்களை ரட்சிக்கும் சேதிகளைத் தான் செப்பும் சக்தியுண்டா நமக்கு...?

எதைச் சொல்வேன்...எப்படிச் சொல்வேன்...என்ன தான் சொல்வேன்...? ஆ, எதை, எப்படி என்னவென்று என்றால் சொல்ல முடியும்...? சொல்லும் பொருளுமாய் சொற்பொருளின் அற்புதமாய், அன்னை பகவதி ஒருவளே இருக்கும் போது,

'அம்மே, நீ சொல்க...எளியனேன் கரம் கொண்டு அந்த மகிமைகளை நின் அருளே சொல்லட்டும்...இரு கரம் கூப்பி, கண்ணீர் மல்க கண்டுணர்ந்து நிற்கிறேன்...தாயே, பகவதி.

3-3



தீர்ப்பு சொல்ல தேசத்தில் ஆயிரம் நீதி மன்றங்கள் உண்டு; ஆனுல், தீவினையைப் போக்க அன்னே சக்தியின் அருள் மாமன்றம் ஒன்று தான் உண்டு.

அதனுல் தான், அதோ அவள் சந்நிதியில் உடற்பிணி, உள்ளப் பிணி—பில்லி சூன்யப் பேய் பிசாசு எனும் கீழ்மைச் சக்திகளால் ஏற்பட்ட அவலப் பிணி கொண்டோர் ஆடி அலமலர்ந்து அவள் அருள் கேட்க அத்தனைக் கூட்டம்... அபயக் குரல்.

''எங்கம்மா பத்மாவதி இருட்டு வழியிலே பயந்ததால் பேய் பிடித்தது. எந்த மந்திர, தந்திர வைத்தியத்துக்கும் கேட்கலே. சோட்டானிக்கரை அம்மா சந்நிதியிலே ஏழுநாள் பஜனம் இருந்தோம்...பேய் கீழ்க்காவலிலே ஆணி அடிச் சுட்டுப் போயிட்டுது'' என்று சொல்லும் தேவி குளம் பாஸ்கர்—

''எங்கண்ணன் கெட்ட எண்ணத்துடன் செய்த ஏவலால் என் மகளுக்கு சாப்பாடு—உறக்கமில்லாமல் போச்சு...அம்மா சந்நிதிக்கு வந்து நாலைந்து நாள் விரதம் இருப்பதற்குள்ளே எவ்வளவோ குணமாகி விட்டது'' என்று கூறும் எர்ணுகுளம் பி. புருஷோத்தம கம்மக்...

—இப்படி எண்ணற்ற குரல்கள்.

சில நூற்ருண்டுகளுக்கு முன்...

குப்தன் நம்பூதிரி என்ற ஓர் இளைஞன். வேதம் கற்று அவற்றின் பால் பெரும் மதிப்பு கொண்டவன் தான். இருப்பினும் உலகியல் சிற்றின்பலலித கலைகளிலும் சுவை அதிகம் உள்ளவன்.

சோட்டானிக்கரை ஆலயத்திலிருந்து எட்டு மைல் தொலைவிலுள்ள தொட்டாரா என்ற கிராமத்தைச் சேர்ந்தவன் அவன்.

கதக்களி ஆட்டமென்ருல் அவனுக்கு உயிர். அருகில் எங்கே கதக்களி நிகழ்ச்சி நடந்தாலும் பார்க்கப் போய் விடுவான்.

ஒருநாள் சற்று தொலேவிலுள்ள திருப்புனித்துரா என்ற ஊரில் கதக்களி நிகழ்ச்சி நடைபெறுவதை அறிந்ததும், அங்கே புறப்பட்டு விட்டான். இரவு வேளையில் தான் அந்நிகழ்ச்சி நடைபெறும். இரவில் முன்னதாகவே தன் உணவை முடித்துக்கொண்டு தன் ஊரிலிருந்து நிகழ்ச்சியைக் காணப் புறப்பட்டான். துணைக்கு வேறு யாரும் கிடைக்க வில்லே. தன்னந்தனியாகவே கிளம்பினுன்.

வழியில் உள்ள, கோழப்பள்ளி மனேயிலுள்ள, தன் குருநாதரிடம் ஒப்படைப்பதற்காக அவன் கைவசமிருந்த கிரந்தச் சுவடிகளேத் தவிர வேறு எந்தத் துணையுமில்லே.

நல்ல நிலவொளி.

சுமார் ஐந்து மைல் தூரம் அவன் நடந்திருப்பான். சட்டென்று ஓர் அபூர்வ இனிய நாதம் அவன் காதில் விழுந்தது. ஒரு பெண்ணின் வளேயல் ஒலிதான் அது.

அந்தப் பெண் யாரென்று தெரிந்ததும் நம்பூதிரியின் உற்சாகம் பதின்மடங்காகியது. வாரியாத்து கல்யாணி என்று அவனுக்கு அறிமுகமாக பெண் தான் அது. அவள் பேரில் அவனுக்கு வெகுநாளாக மோகம் உண்டு.

இப்பொழுது அவளே தனி வழியில் அவனேடு வருவதைக் கண்டதும் உற்சாகம் பொங்க, ''கல்யாணி, என்ன இந்த நேரத்தில் இங்கே?'' என்று விசாரித்தான். கல்யாணி என்றுமில்லாத அளவு இணக்கமாகவும், இளஞ்சிரிப்புடனும், ''இருட்டறதுக்குள்ளே போய்ச் சேர்ந்திடணும்னுதான் நினேத்துப் புறப்பட்டேன். புறப்படறபோதே நேரமாயிட்டுது'' என்ருள்.

''நீ எங்கே போகணும்...?''

''திருப்புனித்துராவுக்குத்தான்.''

''கதக்களி பார்க்கவா?''

''ஆமாம்'' என்று ஒயிலாகத் தலேயாட்டினுள் கல்யாணி.

உற்சாகம் கரைபுரண்டது, நம்பூதிரிக்கு.

''நாம் சேர்ந்தே போவோம்'' என்று அவளை அழைத்தான்.

முதலில் சற்று பிகு செய்து கொண்டாலும், பின் இணங்கி அவனுடன் குழைவாகப் பேசிச் சிரித்துக் கொண்டே துணை நடந்தாள் கல்யாணி.

இன்ப நினைவுகளில் உருகிக் கொண்டிருந்தான் நம் பூதிரி

''அவளுடன் சேர்ந்து கதக்களி பார்த்துவிட்டு, பின் சேர்ந்தே தனியாகத் திரும்பி வரும் போது தன் ஆசையைப் பூர்த்தி செய்து கொள்ள வேண்டும்'' என்று மனத்தில் தாகம்.

இடையில் தன் குருநாதரின் இருப்பிடமான கோழப் பள்ளி மனையை நெருங்கவே, தன் ஆசானிடம் கிரந்தச் சுவடியை ஒப்படைக்க வேண்டிய கடமை நினைவுக்கு வந்தது, நம்பூதிரிக்கு.

''கல்யாணி, கொஞ்சநேரம் வாசலிலே நில்லு. நான் போய் ஆசானிடம் சுவடியைக் கொடுத்து விட்டு வருகிறேன்'' என்று அவளை வாசலில் நிற்க வைத்து விட்டு மனைக்குள் சென்றான்.

''என்னைத் தனியாகக் காக்க வைக்கிறீர்களே, சீக்கிரம் வந்து விடுங்கள்'' என்று நளினமான சிரிப்புடனும், சிணுங் கலுடனும் கூறினாள் கல்யாணி.

அந்தச் சிணுங்கலும், சிரிப்பும் நம்பூதிரிக்கு மோக லாஹிரியை ஊட்டின. ''இதோ வந்து விடுகிறேன்'' என்று உற்சாகத்துடன் தன் ஆசானின் மனைக்குள் ஓடோடிச் சென்று அவரிடம் அவசர அவசரமாக கிரந்தச் சுவடியைக் கொடுத்துவிட்டுப் புறப்பட எத்தனித்தான்.

அவனுடைய அவசரத்தையும், பரபரப்பையும் கண்டதும் அவனுடைய குருநாதர், ''ஏன் இவ்வளவு அவசரப் படுகிறாய்?'' என்று விசாரித்தார்.

குப்தன் நம்பூதிரியால் தன் ஆசானிடம் உண்மையை மறைக்க முடியவில்லை. தயங்கித் தயங்கி, ''என் ஆசைக்குரிய பெண்ணோடு கதக்களி பார்க்கப் போகிறேன். அவள் வாசலில் காத்து நிற்கிறாள். அதனால் தான் என்றான்...''

ஆசானுக்கு ஏதோ சந்தேகம் தட்டியது. வாசலில் நின்ற பெண்ணைப் பார்த்தார்.

''அந்தப் பெண்ணுடன்தான் வந்தாயா? என்று கேட்டார்.

நம்பூதிரி இளைஞன் குழைந்து நெளிந்து கொண்டே ''ஆமாம். அவள் தான் என் ஆசைக்குரிய வாரியாத்து கல்யாணி'' என்றான்.

ஆசான் வேதனையுடன், ''வசமாகச் சிக்கிக் கொண்டாயே, அந்தப் பெண் யாரென்று நன்றாகப் பார்'' என்றார்.

நம்பூதிரி வாசலைப் பார்த்தவாறே, ''அவள் கல்யாணி தானே?'', என்றான்.

''நீயாகப் பார்த்தால் உனக்குத் தெரியாது. என் உடம்பைத் தொட்டுக்கொண்டு பார்'' என்றார் ஆசான்.

வேதஞானங்களையும் மந்திர தந்திர கிரந்தங்களையும் கற்று நெருப்பான சக்தி வல்லமை பெற்ற தன் ஆசானின் தோளைத் தொட்டுக்கொண்டு குப்தன் நம்பூதிரி வாசற் புறத்தை நோக்கினான். மறுகணம், ''ஆ'' அம்மா, என்று வீறிட்டு அலறினான். காரணம் அவனுடன் அதுவரை வந்தது கல்யாணி அல்ல. ஒரு பயங்கரமான யட்சிணி;

''உன் ரத்தத்தை குடிப்பதற்காகவே இந்த மாயப் பெண்ணுருவத்தில் உன்னைத் தொடர்ந்து வந்திருக்கிறது. இன்று இதனிடமிருந்து நீ தப்புவது கடினம். இதுவரையில் உன் கையில் என் கிரந்தச் சுவடி இருந்ததால் அது உன்னைத் தொடத் தயங்கியிருக்கிறது. ஆனால் இப்போது அது வாசலில் காத்து நிற்கும் முறையைப் பார்த்தால் நீ மனையை

விட்டு வெளியேறிய சில நிமிஷங்களிலேயே உன்னைப் பலி கொண்டுவிடும் போலிருக்கிறது'' என்றார் ஆசான்.

''நீங்கள் தான் என்னை காப்பாற்ற வேண்டும் சுவாமி'' என்று அவர் காலைப் பிடித்தான் நம்பூதிரி.

''சாதாரணப் பேய் பிசாசுகளை என்றால் கட்டுப்படுத்த முடியும். ஆனால் உன்னுடன் வந்திருப்பதோ மகா பயங்கர மான யட்சிணி. உன்னைக் காக்கும் சக்தி எனக்கு இல்லை. ஒரே ஒரு வழிதான் உனக்கு இருக்கிறது. ஆனால் அதை சாமர்த்தியமாக நீ நிறைவேற்றத் தவறவிட்டால் முடிவு என்ன ஆகுமென்று எனக்கே தெரியாது'' என்றார் ஆசான்.

ஆசைதான் மாயை என்பார் அறவோர்.

அந்த பேருண்மைதான் குப்தன் நம்பூதிரி வரலாற் றிலும் மெய்யாகிற்று.

இரவில் தனி வழியில் தன்னைத் தொடர்ந்த யட்சிணியை அவனால் அடையாளம் கண்டு கொள்ள முடியாமல் போன தற்குக் காரணமே கல்யாணி என்ற பெண்ணின் மேல் அவன் கொண்டிருந்த அளவற்ற மோகம்தான்.

'அந்த இரவில் அந்தப் பெண் அங்கே வருவாளா?' என்று சிந்திக்க அவனால் முடியவில்லை.

கோமப்பள்ளி ஆசான் அவனுக்குப் புரிய வைத்தபோது தான் மாயை விலகிற்று. பதறினான்.

சுவாமி, தாங்கள்தான் நான் உயிர் தப்ப வழி சொல்ல வேண்டும்'' என்று தன் ஆசானைப் பற்றிக் கொண்டு துடித் தான்.

''சோட்டாணிக்கரை அம்மாவைத் தவிர வேறு யாராலும் உன்னைக் காப்பாற்ற முடியாது. இந்த யட்சிணி எல்லைக்குள் போய்ச் சேர்ந்து விட்டாள் அவள். உன்னைக் காப்பாற்றி விடுவாள். ஆனால் அந்த யட்சிணியிடமிருந்து நீ தப்புவது உன்னுடைய மனோதிடத்தில்தான் இருக்கிறது. நன்றாகப் புரிந்து கொள். இப்போது நான் என் மேனியில்

போட்டிருக்கும் இந்த ஈரத் துண்டை உனக்குத் தருகிறேன். அதை நீ உன் தோளில் போட்டுக் கொண்டு செல். இந்தத் துண்டு உன் தோளில் இருக்கும் வரை யட்சினி உன்னை நெருங்க முடியாது. ஆனால் உன்னைத் தொடர்ந்தே வரும். அதை விலக்கித் துரத்தும் சக்தி துண்டுக்குக் கிடையாது. அம்மாவின் எல்லைக்குள் நுழையும்போது துண்டை விட்டெறிந்து விடு'' என்று கூறித் தன் சீடனுக்கு தான் போட்டுக் கொண்டிருந்த மேல் துண்டைக் கொடுத்தார் ஆசான்.

அதை வாங்கித் தன் தோளில் போட்டுக் கொண்டு வெளியேறினான் நம்பூதிரி. வாசலில் நின்ற யட்சிணியோ மீண்டும் அவனுக்கு கல்யாணியைப் போலவே காட்சியளித்தாள். இருந்தும் அவன் அவளை ஏறெடுத்தும் பார்க்கவே அஞ்சி நடுங்கியவனாய், ''சோட்டானிக்கரை அம்மா, சோட்டானிக்கரை அம்மா'' என்று கதறியபடி அவளைக் கடந்து ஓடினான்.

அந்த இடத்திலிருந்து சோட்டானிக்கரை ஆலயம் சுமார் எட்டு மைல் தொலைவில் இருந்தது. எட்டாத தொலை தூரமாய் இருந்தாலும் கூடப் பறந்தோடி எட்டிவிடும் வேகத்துடன் நம்பூதிரி ஓடிக்கொண்டிருந்தான்.

குப்தன் நம்பூதிரி பதறி ஓடுவதைக் கண்ட யட்சிணிக்கு உக்கிரம் அதிகமாகியது.

மூர்க்கமாக அவனைக் கைப்பற்றும் முனைப்புடன் அது அவனை விரட்டிக் கொண்டு ஓடியது.

எட்டு மைல் தொலைவு இடைவிடாது அசுர வேகத்தில் ஓடியது. மனித சக்திக்கு மீறிய விஷயம். ஆனால் குப்தன் நம்பூதிரியோ அப்படி ஓடினான். யட்சிணி விரட்டியதால் ஏற்பட்ட அச்சமா? அல்லது அருள் ஒளியாய் நின்று அவனை ஈர்த்துக் கொண்டிருந்த அன்னை சோட்டானிக்கரை பகவதியின் அருள்பாலிப்பா?

யார் அறிவார் அந்த மகிமையை.

எட்டு மைல் தொலைவும் கடந்து அன்னை பகவதியின் அருட்கோட்டையான ஆலயத்தின் எல்லையருகே நெருங்கி விட்டான் நம்பூதிரி.

எல்லைக்குள் நுழையும்போது ஆசானின் அறிவுரை நினைவுக்கு வந்தது.

அதன்படி வாசலுக்குள் நுழைய ஓரடி தூரம் இருக்கும் போது துண்டையெறிந்தான். ஆனால் அந்த ஒரு விநாடிக்குள் எது நடக்கக்கூடாது என்று அவன் அஞ்சினானோ அந்த உற்பாதம் நடந்துவிட்டது. துண்டை வீசிவிட்டு ஆலயத்துக் குள் அவன் நுழைந்து கொண்டிருக்கும்போது ஆலய எல்லைக் குள் பதிந்திராத அவனுடைய ஒரு காலை யட்சிணி பிடித்துக் கொண்டது. ஆசானின் துண்டோ தோளில் இல்லை. அன்னையின் எல்லைக்குள்ளோ முழுவதுமாக அவன் நுழைந் திருக்கவும் இல்லை. இந்நிலையில் கால் யட்சிணியின் பிடிக்குள் சிக்கிக் கொண்டு விட்டது!

அந்த விநாடியில் ஒரு பிரளயப் போராட்டமே நிகழ்ந்தது அங்கே.

உயிர் வாதையில் ''அம்மா, சோட்டானிக்கரை அம்மா'' என்று அந்த அருள் சூழ்ந்த வட்டாரமே அதிர்ந்து மோன வெளியெங்கும் எதிரொலிக்க அலறுகிறான் நம்பூதிரி.

யட்சிணியோ தன் கையில் கிடைத்த குருதிவேட்டையை இழந்து விடக்கூடாது என்று மூர்க்காவேச வெறியுடன் அவனை இழுக்கிறது. அன்னையின் வாசல் எல்லையில் ஒரு ஜீவ மரணப் போராட்டம். ''அம்மா, அம்மா, என்று அலறுகிற குப்தன் நம்பூதிரியின் மனித சக்தி சாமர்த்தியங்களெல்லாம் ஒடுங்குகின்றன. ''அம்மா, அம்மா'' என்ற குரலும் ஈனஸ்வரத்தில் ஒலிக்கிறது.

திடீரென்று அவனுடைய பஞ்சேந்திரியங்களும் சிலிர்க் கும் வண்ணம் ஒரு தெய்வீக இசை அங்கே எழுகிறது. அது வேறொன்றுமில்லை. அன்னை பகவதியம்மன் ஆலயத்தில்

நாள்தோறும் வாசிக்கப்படும் பஞ்ச வாத்தியங்களின் ஒலி தான்.

ஆனால் அந்த ஒலி இதுவரை அவன் கேட்டிராத வண்ணம் அதிவேக எழுச்சியுடனும் துரித சுதியிலும் விண்ணதிர ஒலிக்கிறது.

கேட்போரின் பஞ்ச புலன்களையும் அதிர வைக்கும் அந்த ஒலியைக் கேட்டு குப்தன் நம்பூதிரி பிரக்ஞை இழந்து கூப்பிய கரங்களுடன் மயங்கிச் சாய்கிறான். அப்போது திடீரென்று அந்தப் பஞ்ச வாத்தியங்களின் ஒலியோடு இன்னொரு இன்னிசை ஒலியும் அவன் உணர்வுகளில் புல்லரித்துக் கொண்டிருந்தது. அதுதான் திரிபுவனங்களையும் கோடானு கோடி அண்டங்களையும் அந்த அண்டங்களில் வாழும் கணக் கற்ற கோடி ஜீவராசிகளையும் ஆத்ம அமுதமாக ஆண்டருளும் தெய்வீகச் சதங்கையொலி, ஆம்; அன்னை பகவதியின் திருப் பாதச் சதங்கையொலிதான் அது. அந்த இன்னிசை மண்டலத்துள் மயங்கிச் சாய்ந்திருந்த குப்தன் நம்பூதிரிக்கு அதற்குப்பின் அங்கே என்ன நடந்தது என்றே தெரியாது.

மீண்டும் அவன் கண் விழிக்கும் போது சோட்டானிக் கரை அன்னையின் சந்நிதியில் அவன் இருந்தான். சுற்றி நின்ற நம்பூதிரிகள் அவனை கருணையோடு நோக்கிக் கொண் டிருந்தனர். ஆலய ஜோதிடக்காரர் பிரச்னம் பார்த்து அன்றிரவு நடந்ததை தேவியின் அருள்வாக்காக அனைவருக் கும் விளக்கிக் கொண்டிபந்தார்.

''குப்தன் நம்பூதிரியின் குரல் கேட்டு திரிபுரசுந்தரியான தேவிபகவதியே தன்னுடைய சந்நிதியிலிருந்து எழுந்து உக்கிராவேசத்துடன் சூலம் ஏந்தி தன் சதங்கை ஆர்ப்பரிக்க தாண்டவ நர்த்தனமாடி சூலத்தால் யட்சிணியை அழித்து அவனைக் காப்பாற்றினாள்'' என்பதுதான் அது.

யட்சிணி அழிக்கப்பட்ட அந்த இடம் தான் இன்றும் 'யட்சி மண்டபம்' என்று சோட்டானிக்கரை ஆலயத்தில் பெயர் விளங்க அமைந்திருக்கிறது.

இது கொல்லம் ஆண்டு 700-க்கும் 800-க்கும் இடைப் பட்ட காலத்தில் இந்தத் தலத்தில் நடந்த உண்மை வரலாறு. ஆனால் இதை எத்தனே பேரால் நம்ப முடியும்?

நாமெல்லாம்தான் பகுத்தறிவாதிகள் ஆயிற்றே, கண்ணால் காணுத செய்திகளை அவ்வளவு சுலபமாக நம்பி விடுவோமா?

பேயாவது, பூதமாவது—இது சில பிழைப்பற்றவர்களும் புத்தி பேதலித்தவர்களும் கட்டி விடுகிற கதையல்லவா நம்மைப் பொறுத்தவரையில்! ஆனால் இதை நம்புகிற வர்கள் நம்பலாம். நம்பாதவர்கள் தள்ளலாம். ஆனால் அன்றும் இன்றும் சோட்டாணிக் கரை அன்னே பகவதியின் ஆலயத்தில் தினந்தோறும் நடந்து கொண்டிருக்கும் மெய் சிலிர்க்கும் காட்சிகளைக் கண்ணுள்ளோர்கள் காண்கிருர்கள். அது யாருடைய நம்பிக்கையையும் வளர்ப்பதற்கோ, போக்குவதற்கோ நடைபெறும் காட்சிகளும் அல்ல; நடத்தப் பெறும் காட்சிகளும் அல்ல.

நலிந்தோர் நாதியற்றோர் அம்மாவைத் தவிர வேறு கதியில்லே, என்று நம்புவோர் அனைவரும் அவளைத் தேடி வந்து சூழ்ந்து நிற்க, அந்த சந்நிதியில் தினம் தினம் நடக் கும் காட்சிகள்...

அதோ அன்னேயின் ஆலயத்தில் பூஜை வேளை நெருங்கிக் கொண்டிருக்கிறது. சாரிசாரியாகப் பக்தர்கள் ஆலயத்துக் குள் குழுமிக் கொண்டிருக்கின்றனர். அந்த பக்தர் பெருங் கூட்டத்தின் மத்தியில் ஒரு மூலேயில் நாம் துரும்பாய் நின்று கொண்டிருக்கிறோம்.

அங்கு கனன்று கொண்டிருக்கும் பக்தி உணர்வில் இளம் வெப்ப வெதுவெதுப்பில் உணர்வுகள் சிலிர்க்க நின்று கொண்டிருக்கிறோம். அமைதி தவழும் முகங்களுடன் ஆண்கள், பெண்கள் அங்கே நுழைந்து கொண்டிருக் கிருர்கள். அவர்களில் சிலர் முகத்தில் அந்தக் கேரள நாட் டுக்கே உரித்தான சுந்தர வசீகரம் களை சொட்டுகிறது.

அடக்கமும் பதவிசுமாக அந்த நன்னாட்டுப் பெண் மக்கள் அமைதியே உருவாக அன்னையின் சந்நிதிக்கு வருகிறார்கள். அவர்களுடைய குலப் பண்பும், மனப் பண்பும் அவர்களுடைய சிறிய அசைவுகளிலும் வெளிப்படுகிறது.

முன்பின் தெரியாத அந்நிய ஆடவர்களைக் கடந்து செல்லும் போது தன் தோள்களை ஒடுக்கி தம் மேல் தாவணி முனை கூடப் பிறர் மீது பட்டு விடாதபடி அடக்கமாக அவற்றை ஒதுக்கிப் பிடித்துக் கொண்டு நுழைகிறார்கள்.

சிறிது நேரமாகிறது. பஞ்ச வாத்தியம் முழங்குகிறது. ஆலயப் பூஜைக்கு அறிகுறியாக, மேல் சாந்தி பூஜைக்கு ஆயத்தம் செய்து கொண்டிருக்கிறார்கள். திடீரென்று சில பெண்கள் வீறிட்டலறிக் கூக்குரலிடுகிறார்கள்.

"அம்மே, நாராயணா, லட்சுமி நாராயணா, என்று குரல் கொடுத்தவாறே சில பெண்கள் ஆட ஆரம்பித்தனர். அந்தப் பெண்களில் சிலர் சற்று முன் நாம் பார்த்த பெண்கள் தான். அமைதியும் அடக்கமுமாக நம் முன்னால் தென்பட்ட பெண்கள் தான். அவர்கள் முகத்தில் இப்போது அமைதியில்லை. சாந்தமான களையில்லை. கண்கள் கோவைப் பழம்போல் சிவந்து மூழ்குகின்றன. தலைமுடி கலைந்து பறக்கின்றன. உடம்பெல்லாம் குலுங்க நிலை தடுமாறி அசுர வேகத்தில் ஆடுகின்றனர். சற்று முன் தம்முடைய ஆடையின் முனை கூட மற்றவர் மேல் படக்கூடாது என்ற பதவிசுடன் ஒதுங்கி வந்த அநேகப் பெண்கள் இப்போது தம் மேலாடைகள் கலைந்து தாறுமாறாகப் பறக்க, சிலர் அலங்கோலமாக ஆடுகின்றனர். சுய சுத்தத்துடன் அவர்கள் இருந்தால் அப்படி ஓர் அலங்கோலத்தை நிச்சயம் அனுமதித்திருக்க மாட்டார்கள். ஆனால் அவர்களை ஆட்டுவிப்பதோ அவர்களின் சக்திக்கு அப்பாற்பட்ட ஓர் அசுர வேகம். என்ன அது?

நம் கண்களில் கண்ணீர் துளிர்க்க, உணர்வுகள் கட்டுண்டவர்களாக அந்தக் காட்சியைக் கவனித்துக் கொண்டே

யிருக்கிறோம். பஞ்ச வாத்தியங்களின் ஒலி அன்னையின் சந்நிதியில் உக்ராவேசத்துடன் ஒலிக்கிறது.

நாம் திகைத்து நிற்கிறோம்.

உண்மையில் நம் கண்முன்னே என்ன அற்புதம் நடந்து கொண்டிருக்கிறது.

தெய்வ சந்நிதியில் அசுர சக்திகளின் எழுச்சியா...?

அமைதியே உருவாக வந்த பெண் மக்கள் இப்படி அலங் கோலமாய் ஆவேசக் கூக்குரலிட்டு ஆடுவதேன், அரற்று வதேன்...?

''ஏன் இப்படி...?மனதுக்கு எப்படியோ இருக்கிறதே'' என்று நம் அருகிலிருக்கும் ஆலய ஊழியர் ('மாசப்படி.') கே. கே. நாயரிடம் கேட்கிறோம், கலவரத்துடன்.

ஆனால் அவரோ|அமைதியுடன் கூறுகிறார்: அந்தப் பெண் களுக்கு இனி விடிவு காலம் பிறந்துவிட்டது. பஜனத்துக்குப் பலன் கிடைக்கப் போகிறது.''

நான் வியந்து நிற்கிறேன்.

''ஆமாம்! அவர்கள் அம்மா சந்நிதியிலே இப்படி அட ஆரம்பிச்சுட்டாங்கன்னா, அவங்க உடம்பில் இருக்குற பூத சக்திகள் அசைந்து வெளியேறிப் போகிற வேளை வந்து விட்டது என்று அர்த்தம். இவர்கள் உடம்பிலுள்ள பேய் பிசாசுகள் எல்லாம் அம்மாவுக்குப் பயந்து நடுங்கி கூச்சல் போடற சத்தம்தான் இது. இனிமேல் அந்த சக்திகள் எல்லாம் அம்மாகிட்டே வாதாடிப் பார்க்கும். அம்மாவிட மாட்டாள். அப்புறம் அம்மா கட்டளைப்படி அவையெல் லாம் தானாகவே ஆணி அறைந்துவிட்டு அடங்கிப்போகும்'' என்றார் அவர்.

அம்மாவிடம் பேய்கள் வாதாடுமா...தாமாகவே ஆணி அறைந்து கொண்டு அடங்கிவிடுமா...

—இவையெல்லாம் எனக்குப் புதுச் செய்திகளாக இருந்தன.

“‘அவையெல்லாம் நம் கண் முன்னாலேயேவா நடை பெறும்?’’— மிரட்சியுடன் கேட்டேன்.

நீங்கள் கண்ணாலேயே பார்க்கலாம். இரவு கீழக்காவல் சந்நிதியில் நடக்கும் குருதி பூஜையில் கண் முன்னாலேயே பார்க்க முடியும்’’ என்றார் அவர்.

ஃ ஃ ஃ

அதிகாலை முதல் இரவு வரை சோட்டானிக்கரை பகவதி யம்மன் தன் ஆலயத்தில் நடத்தி வைக்கும் அற்புதங்கள்...

அந்தத் தலத்தில் அன்னை பகவதி முப்பெருந்தேவியின் அம்சங்களை ஒருருவில் சங்கமிக்கச் செய்து அருட்காட்சி அளிப்பதே ஓர் அற்புத வரலாறு.

ஆம்; வேறு எந்தத் தலத்திலும் நிகழாத ஒரு பேரற் புதமாய்—இன்னொரு பிரபல தலத்திள்ள தேவியே சோட் டானிக்கரை தலத்துக்கு எழுந்தருளி, குறிப்பிட்ட நேரம் வரைஅங்கு தங்கியருள் தருகிற செய்தி அங்கு நிகழ்கிறது

ஆம்! மைசூரிலுள்ள மூகாம்பிகை அம்மன் காலை ஆறு மணி வரை சோட்டானிக்கரை ஆலயத்தில்தான் சாந் நித்தியம் கொண்டு இருக்கிறாள்...

இந்த வியப்பூட்டும் தெய்வீக வரலாறு நிகழக் காரண மாக இருந்தவர் அருள் மகான் ஆதி சங்கர பகவத் பாதாள் தாம்...

எப்படி நடந்தது அந்த அற்புதம்?

குருவாயூர் அப்பனும்—சபரிமலை அப்பனும் அருட் கொலு கொண்டு ஆண்டருளும் பரசுராம தேசமாகிய மலையாள நாட்டில் சக்தி மாதாவின் அருளும், உச்சிதச் சிறப்போடு திகழ வேண்டும் என்று விரும்பினார் மகான் ஆதி சங்கரர்.

எனவே மைசூரிலுள்ள சாமுண்டீஸ்வரி தேவியை கேரளாவிலுள்ள வேந்த நாட்டிற்கு வந்து சாந்நித்தியம் கொள்ளச் செய்ய வேண்டும் என்று விரும்பி சாமுண்டீஸ்வரி

தேவியைப் பிரார்த்தித்து அரிய தவம் மேற்கொண்டார் அவர்.

தம் அருட் செல்வனுன ஆதிசங்கரரின் துதிகேட்டு மனம் கனிந்து அவர்முன் பிரத்தியட்சமானுள் சாமுண்டீஸ்வரி யான பராசக்தி.

''அன்னையே, மாதா இல்லாத மதலையாக மலையாள நாடு உன் அருளுக்காக வேண்டி நிற்கிறது. நீ அங்கு எழுந்தருள வேண்டும்'' என்று பிரார்த்தித்தார்.

தம் திருமகனின் கோரிக்கை கேட்டு தெய்வீகமாய்ப் புன்னகைத்தாள் தேவ தேவி. அன்னையின் தயக்கம் பிள்ளையின் உறுதியைத் தளர்த்தவில்லை.

''அம்மா, நீ அருள் புரிந்து என்னுடன் வராவிடில் நான் நின் பாதம் விட்டகலேன்'' என்று உறுதியாகப் பற்றி நின்ருர் ஆதிசங்கரர்.

லோகமாதா மனம் நெகிழ்ந்தாள்...

''என் அருட்செல்வ, உன் கோரிக்கையை ஏற்கிறேன், ஆனுல், ஒரு நிபந்தனை...''

''என்ன தாயே...?''

''உன் விருப்பப்படியே, நான் உன்னுடன் மலையாள பூமிக்கு வருகிறேன். நீ முன்னுல் வழி நடக்க வேண்டும். நான் உன்னைத் தொடர்ந்து வருவேன். எந்த இடத்தில் நான் சந்நிதி கொள்ள வேண்டும் என்று நீ விரும்புகிருயோ, அந்த இடம் வரை நீ திரும்பிப் பார்க்காமல் நடந்து கொண்டே இருக்க வேண்டும். இடையில் நீ திரும்பிப் பார்த்தால், நீ பார்த்த இடத்திலேயே நின்றுவிடுவேன்...இது தான் என் நிபந்தனை'' என்று திருவாய் மலர்ந்தருளினுள் தேவி.

தேவியின் கட்டளையை ஏற்றுக்கொண்டார் ஆதி சங்கரர்.

அன்னையும் தம் திருச்செல்வரின் கோரிக்கைப்படி அவருடன் வந்தாள்...

மகான் ஆதிசங்கரர் முன்னால் நடக்க, இன்னிசை நாதமாக அன்னையின் சதங்கை ஒலிக்க தேவி தொடர்ந்து வந்து கொண்டிருந்தாள்.

'ஜல்ஜல்' என்ற அன்னையின் பாதச் சிலம்பொலி கேட்டவாறு ஜகத் குருவான மகான் ஆதிசங்கரர் முன்னால் நடந்து கொண்டிருந்தார்...

பாதி வழி தூரம்தான் வந்திருப்பார்கள்...

திடீரென்று சிலம்பொலி சப்தம் நின்றுவிட்டது.

தன் காதுகளில் ஒலித்துக் கொண்டிருந்த அன்னையின் பாதச் சிலம்பொலி நின்றதும் ஆதிசங்கரர் பரபரத்துத் தடுமாறிப் போனார்...

சிலம்பொலி ஏன் நின்றுவிட்டது...?

எல்லை வரும் முன்னே அம்மா தன் எண்ணத்தை மாற்றிக்கொண்டு திரும்பிச் சென்றுவிட்டாளா? தன் பிள்ளையிடம் தான் அளித்த வாக்கை மாற்ற எப்படித் துணிந்தாள் மாதா?

சிந்தித்துக் கொண்டு இன்னும் ஒன்றிரண்டு அடி எடுத்து வைத்தார்.

இப்போதும் அன்னையின் சிலம்பொலி நாதம் கேட்கவே இல்லை.

சஞ்சலமும், சந்தேகமும் அந்த மகனின் உள்ளத்தைக் கலக்க, அன்னை விதித்த நிபந்தனையைக் கணப்பொழுது மறந்து, ''அம்மா வருகிறாளா?'' என்று திரும்பிப் பார்த்தார்.

கடவுளைவிட பெரியது எது?

நம்பிக்கைதான்.

அந்த நம்பிக்கையின் மூலம் தான் அவன் கடவுளைப் பார்க்கிறான்.

நம்பிக்கை இல்லாவிட்டால் அவனால் கடவுளைப் பார்க்கவும் முடியாது; உணரவும் முடியாது.

அதை வைத்துத்தான் 'உண்டென்பார் பங்கில் ஒளி விளக்காய் நின்ற சக்தி' என்று போற்றினார் ஒருவர்.

இந்த அடிப்படை உண்மை மனிதருள் தெய்வமான மகான் ஆதி சங்கரபகவத் பாதாளுக்குத் தெரியாதா?

தெரியும்.

ஆனாலும் அவர் சித்தத்தையும் ஒருகணம் மயங்க வைத்த ஓர் அருள் விளையாட்டை நடத்த அம்பிகை நிகழ்த்திய தேவ நாடகம்தான் அங்கு அன்று சம்பவித்தது.

'நீ முன்னால் போய்க் கொண்டிரு; நான் உன்னைத் தொடர்ந்து பின்வருகிறேன். நீ திரும்பிப் பார்த்துவிட்டால் அதற்குமேல் நான் உன்னைத் தொடர்ந்து வரமாட்டேன்' என்று தன்னை வந்து அழைத்த ஆதிசங்கரருக்கு சாமுண்டீஸ்வரி நிபந்தனை விதித்து அவரோடு புறப்பட்டிருந்ததால் அந்த வேளையில் ஒருகணம் மகான் ஆதி சங்கரர் குழம்பிப் போய்விட்டார்.

அம்பிகையின் பாதச் சிலம்பொலி கேட்காமல் போகவே அவர் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்துவிட்டார்.

ஆனால் நடந்தது என்ன?

தன் செல்வனான ஆதிசங்கரரிடம் விளையாடவே ஒரு வேடிக்கை செய்தாள் அம்பிகை.

அவரைச் சோதிப்பதற்காகவே தன் பாதச் சிலம்பை கழற்றி வைத்துக் கொண்டாள். உடனே சிலம்பொலி நின்றுவிட்டது. சிலம்பொலி நின்றதும் அருட்செல்வரான ஆதிசங்கரர் ஒருகணம் சித்தம் கலங்கிவிட்டார்.

''அம்பிகை பின்தொடர்ந்து வரவில்லையோ'' என்று சந்தேகப்பட்டு சட்டென்று திரும்பிப் பார்த்துவிட்டார்.

அவர் அருகிலேயே ஜோதிமயமான புன்னகையுடன் ஆதி பராசக்தி நின்று கொண்டிருந்தாள்.

''மகனே, ஏன் திரும்பிப் பார்த்தாய்? நீ என்னை நம்ப வில்லையா?'' என்று தேவி சிரித்தாள்.

''அம்மா. நீ ஒலியோடு என்னுடன் வந்தாயே, அந்த ஒலி நின்றதும்...?''...கண் கலங்கினார் ஆதிசங்கரர்.

''செல்வா, ஒலி—ஒளிகள் மூலமோ, சாட்சிப் பொருள் கள் மூலமோ மட்டுமே என்னை அறிந்து கொள்ள மக்கள் முயன்றால், பெரும்பாலோருக்கு நான் தென்படாமலே போய்விடுவேன். எல்லாவற்றுக்கும் மேலாக உள்ளத்து உணர்வின் மூலம் என்னைக் கண்டு கொள்கிறவர்களுக்கு மட்டும் நான் நித்தியப் பிரசன்னமாய் இருப்பேன்'' என்றாள் தேவி.

''அம்மா, உன்னை நான் புரிந்து கொள்ளத் தவறி விட்டேன்'' என்று கண்கலங்கினார் ஆதிசங்கரர்.

''இல்லை செல்வா! நீ தவறவில்லை. உலகம் தவறி விடாமல் புரிந்துகொள்ள வேண்டுமென்பதற்காகவே உன் சிந்தனையை ஒருகணம் மங்கச் செய்து இந்தத் திருவிளை யாடலை நடத்தினேன்'' என்றாள் உலகமாதா.

''தேவதேவியின் திருவுள்ளத்தில் உருவாகும் திட்டங் களை அறியும் வல்லமை எனக்கு இல்லை. என் குறையைப் பொறுத்தருளி என்னுடன் கேரள நாட்டுக்கு வருகை தர வேண்டும்'' என்று உளம் கசிய வேண்டினார் ஆதிசங்கரர்.

தேவி புன்னகைத்து, ''நான் நிபந்தனையை மீறக் கூடாது. என் நிபந்தனைப்படி நான் இந்த இடத்தைவிட்டு நகரவே முடியாது. இந்த இடத்திலேயே நான் சாந்நித்தியம் கொள்ளப் போகிறேன். இங்கு சரஸ்வதி அம்சமாக நான் அமர்ந்து மூகாம்பிகையாக மூவுலகுக்கும் அருட்காட்சி தரப் போகிறேன்'' என்றாள்.

அன்று அன்னை நின்ற தலமே மைசூர் அருகேயுள்ள மூகாம்பிகை திருத்தலம். அன்னையின் திருவுளம் அறிந்து

ஆதிசங்கரர் கண்ணீர் பெருகியவாறே, ''தேவி, என் பிழையால் மலையாள தேசத்துக்கு உன் வருகை கிடைக்காமல் போய்விட்டதே, என் கோரிக்கை நிறைவேற நீதான் அருள் புரிய வேண்டும்'' என்றார்.

''செல்வா, உன் முயற்சியால் மலையாளத்துக்கு வரவில்லை என்று நீ வேதனைப்படுவதைவிட, உன்னால் மூகாம்பிகை தலம் ஒன்று உருவாயிற்று என்று மகிழ்ச்சியடைவாய். உன் கோரிக்கையையும் நான் ஏற்றுக்கொண்டு கேரள தேசத்துக்கு என் பிரசன்னம் கிடைக்குமாறு ஓர் உபாயம் செய்கிறேன்...

''தினம் உக்ஷத் காலத்தில் நான் சோட்டானிக்கரை தலத்தில் கலைவாணியின் அம்சமாக—மூகாம்பிகையாகத் தங்கி இருப்பேன். காலை உஷத் கால வேளை ஆனதும் மூகாம்பிகைத் தலத்துக்குத் திரும்பி விடுவேன்'' என்று அருள் புரிந்தார்.

அன்று முதல் இன்றுவரை அந்தத் தெய்விக ஏற்பாட்டின்படி சோட்டானிக்கரை தலத்தில் உஷத் காலத்தில் காலை ஆறு மணி வரை அன்னை பகவதி மூகாம்பிகையாக அருளிருக்கை கொண்டிருக்கிறாள் என்பது ஐதிகம். அதன்படி அதை உறுதிப்படுத்துவது சோட்டானிக்கரை திருத்தலத்தில் உஷத் கால நிர்மால்ய பூஜை காலை ஆறு மணிக்கு முடிந்த பின்னரே மூகாம்பிகை தலத்தில் நடை திறக்கிறார்கள்.

அதனால் சோட்டானிக்கரை தலத்தில் காலை நாலரை மணிக்குத் தொடங்கும் உஷத் கால பூஜை அதிமுக்கியத்துவம் வாய்ந்ததாகப் போற்றப்படுகிறது. அந்தப் பூஜையில் கலந்து கொள்ளும் பேறு பெற்றவர்கள் எல்லாம் ஒரே நேரத்தில் சோட்டானிக்கரை அம்மனையும், மூகாம்பிகை அம்மனையும் தரிசிக்கும் பேறு பெற்றவர்கள்.

காலை உஷத் கால வேளையான ஆறு மணிவரை அங்கு தேவி மூகாம்பிகையான சரஸ்வதி அம்சமாக இருக்கிறாள்.

அதன்பின் பன்னிரண்டு மணிவரை மகாலட்சுமியாக இருக்கிருள்.

இரவில், பில்லி, சூன்யம், பேய் போன்ற அசுர--பூத சக்திகளை ஒடுக்கும் சக்தி வல்லமை துலங்க துர்க்காதேவியாக இருக்கிருள்.

இவ்வாறு மூன்று தேவியரின் உருவாய் அன்னை பகவதி முகிழ்ந்து நிற்கிருள். அருள் மணம் பரப்பி நிற்கிருள்.

ஆனுல், சுயம்புவாக அத்தலத்தில் அவள் வெளிப்படும் போது அவள் எந்த அம்சத்துடன் இருக்கை கொண்டாள்?

அது ஒரு மெய் சிலிர்க்கும் தெய்விகத் திருக்கதை.

'மனிதனின் கையில் மனிதன் கிடைத்தால் குரங்கு'— என்பது பழமொழி.

பொதுவாக குடும்பங்களிலும் சரி, பணிமனைகளிலும் சரி, சமூக வாழ்விலும் சரி, தலைப் பொறுப்பேற்பவனிடம் கைப்பாவைகளாக மற்றவர்கள் சிக்கிக்கொண்டு படும்பாடு ஒரு குரங்காட்ட வித்தைதான். தன் அதிகாரத்துக்கு மட்டு மல்லாது, அசட்டுத்தனங்களுக்கும் கூட மற்றவர்களைக் கூட வைத்து விளையாடிக் கொண்டிருப்பார்கள் என்பது அதன் பொருள்.

ஆனுல்—தெய்வத்தின் கையில் மனிதன் கிடைத்தால்... என்னவாகும்? அங்கே ஒரு லோக சம்ரட்சணம்—உலகம் உய்வதற்கான வழி பிறக்கும். மனிதனைக் கைப்பாவை யாக்கிக் கொண்டு தெய்வம் நடத்தும் திருவிளையாடல்கள் அனைத்துமே ஒரு புதிய பலனை உலகுக்கு அளிப்பதற்காகத் தான்.

இந்த இயல்பை ஒட்டித்தான் மகான் ஆதிசங்கரரையே தன் அருள் விளையாட்டுக்குத் தேர்ந்தெடுத்து, மூகாம்பிகா திருத்தலம் தோன்றுவதற்கும்—சோட்டானிக்கரைத் தலத் தில் உஷத் கால (உதய கால) வேளையில் மூகாம்பிகையாகத்

தான் எழுந்தருளியிருப்பதற்குமாய் அருள் பாவித்தாள் லோகாம்பிகை.

இந்த அருட் திருவிளையாடல் அத்தலத்தில் நிகழ்வதற்கு முன் தேவி எந்த அம்சத்தில் அங்கு வீற்றிருந்தாள்? சுயம்பு வாய் தோன்றி அருளிய அவளுடைய மூலசக்தி எது...?

அது ஒரு மெய்சிலிர்க்க வைக்கும் தெய்விக வரலாறு...

இன்று சோட்டானிக்கரை திருத்தலமாக இருக்கும் புண்ணியத் திருநாடு, பல நூறு ஆண்டுகளுக்கு முன் புளிய மரங்கள் அடர்ந்த சிஞ்சாரணிய வனமாகத் திகழ்ந்தது.

அந்த வனத்தில் கண்ணப்பன் என்ற பழங்குடிமகன் தன் மகளுடன் வாழ்ந்து வந்தான். தாயற்ற மகளைத் தன் கண் போலப் போற்றி வந்த அந்தக் கண்ண்ப்பனுக்கு ஒரு கொடூர மான மூடநம்பிக்கை.

அதாவது, தானும் தன் மகளும் அந்த வனத்தில் நிம்மதி யாக வாழ்வதற்கு அருள் புரியும் தேவதையைத் திருப்திப் படுத்துவதற்காக தினம் ஓர் இரத்த பலி அளிக்க வேண்டும் என்பது அவன் நம்பிக்கை. அதற்காக: வனத்தில் அலைந்து திரிந்து காட்டுப்பசு ஒன்றைப் பிடித்து வந்து வனதேவதைக்கு ரத்த பலி அளிப்பான். தினந்தோறும் அவன் நடத்தும் அசுரத்தனமான வனதேவதை பலி பூஜை அது.

உள்ளத்தால் பாசம் மிக்கவனாய் இருந்தாலும், செயலால் பாவத்தை ரத்தக் கடலாகப் பெருக்கிக் கொண் டிருந்தான். அந்தப் பாமரக் காட்டுவாசியான கண்ணப்பன்.

தன் பலி பூஜைக்கு வசதியாக, வாய்ப்புக்கிடைக்கும். போது எல்லாம் கூட்டம் கூட்டமாகப் பசுக்களை அக்கம் பக்கத்திலிருந்து ஓட்டி வந்து தன் குடிசையருகே அவற்றை அடைத்து வைத்துக் கொண்டு, அவற்றிலிருந்து தினம் ஒன்றுகப் பலி கொடுப்பான்.

ஒரு நாள் அந்தப் பசுக்கூட்டத்தோடு ஓர் அபூர்வ களை கொண்ட இளம் கன்றும் அவனால் கொண்டு வரப்பட்டது.

மற்ற பசுக்களிலிருந்து வித்தியாசமாக அபூர்வ அழகுடன் துள்ளி விளையாடிய அந்தக் கன்றைக் கண்டதும் கண்ணப்பனின் மகள் அதன் மீது ஆசை கொண்டு, ஆதைத் தன்னிடம் வளர்ப்பதற்கு ஒப்படைக்குமாறு கண்ணப் பனிடம் கேட்டாள்.

மகள் எதைக்கேட்டாலும் மறுக்காதவன் கண்னப்பன். ஆசையோடு மகள் கேட்டதால் அந்தப் பசுங்கன்றை மகளிடம் ஒப்படைத்து விட்டான்...அதன் மேல் பாசத்தைக் கொட்டி இரவு பகலாகத் தன்னோடு அதை ஒரு தோழியாக வைத்துக் கொண்டு மகிழ்ந்திருந்தாள் கண்ணப்பனின் மகள்.

அந்த நிலையில் தான் திடீரென்று ஒரு சோதனை வந்தது.

ஒருநாள் வனதேவதைககுப் பலி கொடுக்க கண்ணப் பனுக்கு வேறு பசுவே கிடைக்கவில்லை. அவன் கவனம் மகள் வளர்த்த இளங்கன்றின் மீது பட்டுவிட்டது...

அந்தக் கன்றை அன்று வனதேவதைக்குப் பலி கொடுப் பதாக எண்ணம் கொண்டு அதைப் பிடிக்க முயன்றான். அக்கன்றோ, கண்ணப்பனின் உள்ளத்தைப் புரிந்து கொண் டதைப் போல் கையில் சிக்காமல் அங்குமிங்கும் துள்ளி யோடியது. கண்ணப்பன் மூர்க்க வெறியுடன் அதை விரட்டிப் பிடிக்க முயன்றான்.

கன்று அவனிடமிருந்து தப்பும் முயற்சியில் களைத்துச் சோர்ந்து ஓடி வந்து கண்ணப்பனின் மகளுடைய காலடியில் சுருண்டு விழுந்தது. அவள் அதை அன்புடன் அரவணைத்து— அதன் தாகத்திற்குத் தண்ணீர் வைத்து, அதைத் தேற்றினாள். அச்சமயம் கண்ணப்பனே கன்றைத் தொடர்ந்து அங்கு வந்து சேர்ந்தான்.

கன்றை தன்னிடம் ஒப்படைக்குமாறு மகளிடம் கேட் டான். அவள் பிடிவாதமாக மறுத்தாள். "அம்மா, இன்று வனதேவதைக்குப் பலி கொடுக்க வேறு எந்தப் பசுவும் கிடைக்கவில்லை. இந்தக் கன்றைத்தான் பலி கொடுத்தாக

வேண்டும். இல்லாவிட்டால் வனதேவதையின் கோபத்துக்கு உள்ளாவேன்,'' என்று வற்புறுத்திக் கேட்டான் கண்ணப்பன்.

''அப்பா, இதுவரைக்கும் எத்தனையோ பசுக்களைக் கொன்று குவித்திருக்கிறாய். அதை நான் தடுக்கவில்லை. இது என் உயிருக்கு மேலாகப் போற்றி வளர்க்கும் இளம் கன்று. இதை உன் பலிக்கு இலக்காக நான் அனுமதிக்க மாட்டேன்'' என்று அந்த பசுங்கன்றைக் கட்டிக் கொண்டாள் அந்த மகள்.

''இந்த ஒருநாள் பலி தவறினாலும் குடிமோசம் வந்து விடும்'' என்று பரபரத்தான் கண்ணப்பன்.

மகள் ஆவேசத்துடன் திருப்பிக் கேட்டாள்: ''இத்தனை நாள் ஆயிரம் ஆயிரம் பசுக்களைக் கொன்று குவித்திருக்கிறாயே...உதனால் உனக்கு என்ன கிடைத்தது? பாவத்தைச் சேர்த்துக் கொண்டதைத் தவிர, வேறு எந்தப் பலனைக் கண்டாய்? இன்று இந்தக் கன்றை நீ பிடிவாதமாக என்னிடம் இருந்து பறித்துச் சென்று பலி கொடுத்தால், நீ எதிர்பார்க்காத பெரிய நஷ்டம் ஒன்று உனக்கு ஏற்படும்'' என்றாள்.

''என்னம்மா சொல்கிறாய்?'' என்று குழம்பினான் கண்ணப்பன்.

''ஆம் அப்பா, நீ இந்தக் கன்றைப் பலி கொடுக்கும் முன் என்னை இழக்க வேண்டியது வரும். உன்னுடைய கட்டாரி அதன் கழுத்தில் விழும் முன் என் கழுத்தை வெட்டிவிடு'' என்று அந்தக் கன்றை அணைத்துக் கொண்டாள்.

மறுகணம் கண்ணப்பனின் கையிலிருந்த கட்டாரி கை நழுவி விழுந்தது

அவனுடைய பேதலிப்பான மனநிலையைப் பக்குவப் படுத்துவதுபோல், ''அப்பா, பாவ வழிகளில் இறைவனை திருப்திப்படுத்த முடியாது. அப்பாவிப் பசுக்களை இப்படிக்

கொல்வதாலே வனதேவதை திருப்தி அடைவாள் என்று நீ நம்பியது மன்னிக்க முடியாத பாவம்'' என்றாள்.

''அந்தப் பாவத்தை தீர்க்கவே உன்னால் முடியாது. இந்நிலையில் இன்னும் புதிதுபுதிதாகப் பாவத்தைச் செய்து கொண்டிருக்கிறாயே...'' என்று சுட்டிக் காட்டினாள்.

—மகளின் இந்த வார்த்தைகளால் கண்ணப்பனின் மனம் பக்குவப்படத் தொடங்கியது. அவனுடைய மகள் இன்னும் அழுத்தமாக, ''அப்பா, இந்தக் கன்றின் உயிர்க்கும் என் உயிர்க்கும் பேதமில்லை...அதைக் கொல்வது என்னைக் கொல்வது போலத்தான். என்னை நீ பேணுவது போல் இந்தக் கன்றையும் பேண வேண்டும். அப்படி நீ அதைப் பேணுவதாக எனக்கு வாக்குறுதிக் கொடு'' என்று கேட்டாள். மனம் மகிழ்ந்த கண்ணப்பன் அவ்வாறே தன் மகளுக்கு வாக்குறுதியும் கொடுத்தான்.

என்ன மன உந்துதலில் அப்படி ஒரு வாக்குறுதியை தந்தையிடமிருந்து வாங்கினாளோ தெரியவில்லை. ஆனால் அப்படி தந்தையிடம் வாக்குறுதி வாங்கிய சிறிது காலத்திற்குள் எதிர்பாராத விதமாக அவள்—கண்ணப்பன் மகள் இறந்து விட்டாள்.

ஆறாத் துயர் அடைந்த கண்ணப்பனுக்கு ஒரே ஓர் ஆறுதலாகத் தென்பட்டது, மகள் பிரியமாக வளர்த்த கன்று தான். 'நானும் அந்தக் கன்றும் ஒன்றுதான்' என்று தன் மகள் சொன்ன வார்த்தை கண்ணப்பன் மனதில் ஆழமாகப் பதிந்திருந்தது. மகளின் பிரிவை மறக்க தன் பாசத்தையெல்லாம் அந்தக் கன்றின் மீதே கொட்டி வளர்த்தான் கண்ணப்பன். அதற்கு 'கொச்சுக் கரும்பி' என்று பெயரிட்டு அழைத்து ஆறுதல் பெற்றான்.

அந்நிலையில் ஒரு நாள் அவனுடைய கனவில் ஓர் அதிசயக் காட்சி தென்பட்டது.

"கொச்சுக் கரும்பு என்னும்'' அப்பசுங் கன்றின் அருகே ஒரு தெய்விக மகான் நிற்பது போலவும், அவர்களைச் சுற்றி எண்ணற்ற ரிஷிகளும்—ஞானிகளும் வேத மந்திரங்கள் பாடியவாறு மலர் தூவி மகிழ்வது போலவும் கனவு கண்டான். அந்த அதிசயக் கனவிலிருந்து விழித்துக் கொண்டு சுற்றுமுற்றும் பார்த்தான்.

எங்கும் அமைதி; சற்றுமுன் கண்ட காட்சி எங்கும் தென்படவில்லை. இருந்தும் மனஎழுச்சியை அடக்க முடியாமல், 'கொச்சிக்கரும்பி' என்ற தன் ஆசைக்குரிய இளம் பசுங்கன்று கட்டப்பட்டிருந்த கொட்டகைகுச் சென்று பார்த்தான்.

அந்த இரவில் கன்று அமைதியாக தூங்குவது போலவே தோன்றியது. வேறு எந்தக் காட்சியும் தென்படவில்லை. மீண்டும் குடிசைக்கு வந்து படுத்துக் கொண்டான். விடிந்தறும் கன்றுக்குரிய போஷாக்குக் கடமைகளைக் கவனிக்கப கொட்டிலுக்குச் சென்றான்.

அங்கே அவனுக்கு ஒரு திகைப்பூட்டும் அதிசயம் காத்திருந்தது.

முந்திய நாள் இரவு அமைதியாக தூங்கிக்கொண்டிருந்த பசுங்கன்றான கொச்சுக்கரும்பியை அங்கே காணோம். அதற்குப் பதிலாக அந்த இளம் கன்றின் உருவில் பளிச் சென்று தேஜுடன் ஒரு சிலை கல்லாக சமைந்திருந்தது. அந்தக் கன்றின் கல்லுருவத்தின் அருகே தூய ஒளிச்சுடர் விடும் திருமுகத்துடன் ஒரு மகானும் கற்சிலை வடிவில் நின்றார்.

இரவில் உயிருடன் கட்டப்பட்டிருந்த கன்று கற்சிலையானது எப்படி? அருகிலிருக்கும் சுடர் முகத்து மகானின் கற்சிலை எப்படி வந்தது?

திகைத்துப் போன கண்ணப்பனின் நினைவில்பளிச்சென்று கன்றின் சிலையருகே நிற்கும் புனித மகானின் முகம் அடை

யாளம் தெரிந்தது. இரவில் அவனது கனவில் ரிஷிகள் புடை சூழ தோன்றிய மகானின் திருமுகமே அது.

தன் கனவில் தோன்றிய மகான் எப்படி கன்ருேடு இணைந்து கற்சிலையாளுர்? இந்த அதிசயப் புதிரைப் புரிந்து கொள்ள முடியாமல் பேதமைக் குரலில் கதறியழுதான். தான் உயிருக்குயிராக வளர்ந்து வந்த கன்று கற்சிலையான இழப்பைத் தாளாது நெக்குருகி அவன் அழுத குரல் கேட்டு அவனைச் சேர்ந்தோர் கூடிவந்துகுழுமினர். அவர்கள் மத்தியில் ஒரு மகரிஷியும் அங்கு தோன்றிஞர்.

அவர்தான் பராசர மகரிஷி.

சோர்ந்து அழும் கண்ணப்பனை அவர் தன் கருணைக்கரங்களால் அணைத்துக் கொண்டு, ''கண்ணப்பா, ஏன் அழுகிருய் அறியாமல் செய்த பாவங்கள் எல்லாம் இதோடு அழிந்தது என்பதற்கு அடையாளமே இந்தத் திருக் காட்சி. உன் அறியாமையால் நீ தவறு செய்கிருய் என்பதை உனக்குச் சுட்டிக் காட்டி தடுத்தாட்கொள்ளவே, லோகநாயகியான மகாலட்சுமி கன்றின் உருவில் உன்னிடம் வந்தாள். ஆம்; உன்மகளும் நீயும் போற்றி வளர்த்தீர்களே, அந்தக் கன்று வேறு யாருமல்ல... சாட்சாத் மகாலட்சுமியேதான், உன் மனத்தை பாசத்தால் பக்குவப்படுத்தி எதிர்காலத்தில்இந்தப்புண்ணிய பூமியில் பல அற்புதங்களை உன்னைக் கொண்டே நிகழ்த்துவதற்காகாகத்தான் மகாலட்சுமி உன்னைத் தேடி வந்தாள். உன் மனதில் சன்மார்க்க நெறியை உருவாக்கியபின் அவள் உனக்குப் பரி பூரண காட்சி தந்துவிட்டு சில்ாவுருவில் வந்து அமர்ந்து விட்டாள். அன்னை மகாலட்சுமியின் அருகில்நிற்பது வேறு யாருமல்ல; ஸ்ரீமன் நாராயணனேதான் நேற்று உன் கனவில் ரிஷிகளும், வேதமுனிவர்களும் புடைசூழ தெய்வீகத் திருக்காட்சி தந்தவர் மகாவிஷ்ணுவையும் —மகாலட்சுமியையும் காணும் பாக்கியம் பெற்ற உன் பெருமை சொல்லுக் கடங்காது. இதுவரை செய்த பாவங்கள் அனைத்தும் பசுவின்

கன்றுக உன்னிடம் வந்த மகாலட்சுமியின் அமுதவிழிப பார்வையிலேயே அழிந்துவிட்டது!'' என்றூர் பரவசத்துடன்.

வாராது வந்த மாமனியாய், தன் வாழ்விலே பேரற்புதமாய் நிகழ்ந்த அந்தத் தெய்வத் திருவிளையாடலை உணர்ந்த கண்ணப்பன், பேரானந்தப் பெருக்கில் கண்ணீர் பொங்கதன் முன் எழுந்தருளியிருக்கும் மகாலட்சுமியையும்— நாராயணனையும் கைகூப்பித் தொழுதான். அருபில் நின்ற பராசர மகரிஷி அருட்பெருக்குடன், ''அம்மே நாராயணு, லட்சுமி நாராயணு, பத்ரி நாராயணு, தேவீ நாராயணு'' என்ற நாமாவளியை உரத்த குரலில் முழங்கினுர். சுற்றி நின்றோர் அனைவரும் தொடர்ந்து பெரு முழக்கமாய் அன்னையின் நாமாவளியை முழங்கினர்.

''அம்மே நாராயணு, லட்சுமி நாராயணு, ''என்ற கோஷம் விண்ணதிர முழங்கிக் கொண்டிருந்தபோது, ''கண்ணப்பா, உன்னுல் இந்தத் தலம் மகிமைபெற்றது. நீயே மீண்டும் இத் தலத்தில் ஒரு மகாஞக மறு பிறவி எடுத்து. அன்னை பகவதியின் ஆணைப்படி பல அற்புதங்களை உருவாக்கப் போகிருய்...காலம் காலமாக அன்னை பகவதியின் திருநாமம் இத் திருத்தலத்தில் அருள் மணக்க ஒலிக்கப் போகிறது'' என்று கூறியவாறு மறைந்து விட்டார் அம் மகரிஷி.

ஃ ஃ ஃ

அன்று அந்த மகான் கூறிய அருள் வாக்கு இன்றும் சோட்டாணிக்கரை திருத்தலத்தில் அற்புதத் திருமந்திரமாக பலிதமாகி இருக்கிறது.

விடியற்காலை நாலரை மணி முதல் நள்ளிரவு வரை சோட்டாணிக்கரை திருத்தலத்தில் எண்ணற்ற பக்தர்கள் முழங்கும், 'அம்மே நாராயணு, லட்சுமி நாராயணு, என்ற நாமாவளியுடன் அன்னை பகவதி அருட் ஜோதியாய் பொலிந்து கொண்டிருக்கிருள்.

அன்று கண்ணப்பன் என்ற பழங்குடி மகனுக இருந்தவர் தான் பிற்காலத்தில் வில்வமங்கல மகரிஷியாக மறுபிறவி

எடுத்து சோட்டாணிக்கரை திருத்தலத்தில் பல அரிய அருட் செயல்களை நிகழ்த்திய மகான்!

அன்று அவருக்கு காட்சியருளிய மகாலட்சுமி, நாராயண ேைடு கற்சிலைகளாகச் சமைந்து நின்ற இடம்தான் சோட் டானிக்கரை ஆலயத்தில் தெற்குப் பிராகாரத்தில் அமைந் திருக்கும் 'பவளமல்லி' என்ற இடம். அன்று கண்ணப்பன் அறியாமையால் உயிர்ப்பலி கொடுத்த இடம்தான் இன்று சோட்டானிக்கரை ஆலயத்திற்குக் கீழ்புறமாக அமைந்திருக் கும் கிழக்காவு, அங்குதான் இன்று தினந்தோறும் பேய், பிசாசு பில்லி சூன்யம் போன்றவைகளைக் கட்டுப்படுத்தும் பூஜையான 'குருதி பூஜை, நிகழ்கிறது.

அன்று 'பவளமல்லி' என்றழைக்கப்படும் இடத்தில் அமர்ந்திருந்த லட்சுமியும்—நாராயணரும் அருகில் உள்ள ஆலயக் கருவறைக்கு நகர்ந்து வந்து அமர்ந்த விதமே இன் ேைர் அரிய தெய்வீக வரலாறு....

பூமிக்கு அடியிலுள்ள நீரோட்டம் ஊற்ருகப் பொங்கி நிலத்துக்குப் பயன் தர வேண்டுமாளுல் அதற்குப் பலவழிகள் உண்டு.!

தாஞக நீரூற்றுப் பொங்கி வந்து பயன் தருவதும் உண்டு

மக்கள் அரும்பாடு பட்டு கிணறு தோண்டி ஊற்றைத் தேடிப் பொங்கச் செய்வதும் உண்டு.

தெய்வத்தின் அருள் பூமியில் சுரப்பதும் அப்படித்தான்

மாந்தரும் வேத முனிவர்களும் வருந்தி வேண்டித் தவம் செய்து, விரதம் ஏற்று நோன்பு இருந்து, தம் தீட்சண்ய மான ஒருமித்த தியான பூஜைகள் மூலம் தெய்வத்தின் அருளை வருவிப்பதும் ஒருவகை. அது கிணற்றைத் தோண்டி நீரூற்றைப் பொங்கச் செய்வதைப் போல்.

சில சமயம் ஜீவநதியாய் உலகைக் காக்க தெய்வத்தின் அருள் தாமாக—சுயம்புவாகத் தோன்றி உயிர் பயிர்களை ரட்சிப்பதும் உண்டு.

சோட்டாணிக்கரைத் தலத்தின் மகா லட்சுமி, நாராயண துணையான சக்தி வைபவத்துடன் அன்னை பகவதியாய் தோன்றியது, இரண்டாவது வகை. அதாவது ஜீவநதியாய் உலகில் தோன்றி அருள் பாலிப்பது...

பாமரக் குடிமகன் கண்ணப்பனின் அறியாமையையும்—அதனால் விளைந்த பாவத்தையும் போக்கி, அதன் மூலமே தன் ஒளிமிக்க அருள் சாம்ராஜ்யத்தை உலகில் நிறுவத் திருவுளம் கொண்ட நாராயண சமேத லட்சுமியாம் அன்னை பகவதி—கன்றின் உருவில் தோன்றினாள். கண்ணுதல் கருணை வெள்ளம் பிரவகிக்க அங்கே தோன்றினாள்...

அதன்பின்......

அன்னையின் அருள் பூரணமாய் இப்பூமிக்குப் பயன்படும் வேளையை நோக்கிக் காலம் காத்திருந்தது.

கண்ணப்பனுக்கு மகாலட்சுமி காட்சியளித்துப் பல ஆண்டுகள் கழிந்து விட்டன. அந்தப் பகுதியிலும் பல மாற்றங்கள் நிகழ்ந்து விட்டன. கண்ணப்பனும் அவனுடைய இனத்தாரும் மறைந்து, இந்தப் பகுதி புல்லம்—புதர்களும் அடர்ந்த ஒரு தனிமையான வனாந்திரப் பிரதேசமான மாறியது. அந்தப் பகுதியில் வாழ்ந்த மக்கள் இனம்கூட மாறிவிட்டது. புல் அரிந்து வாழ்க்கை நடத்தும் ஓரினத்து மக்கள் அங்கு தோன்றி வாழத் தொடங்கினர்.

இந்த மாறுதலான சூழ்நிலையில் ஒரு நாள்—

ஓர் இளம் பெண் பசுமையான புற்கள் அடர்ந்த அந்தப் பகுதியைக் கண்டு உற்சாகத்துடன் அங்கு வந்தாள். கண்ணுக்குப் பசுமையாகச் செழித்திருந்த புற்களை அரிவதற்காகப் பெரு மகிழ்ச்சியுடன் தன் அரிவாளை எதிரே தென்பட்ட ஒரு பாறையில் தீட்டினாள்.

மறுகணம் அவளை அதிர்ச்சியில் உள்ளாக்கிய ஒரு சம்பவம் அங்கே நிகழ்ந்தது...

தீட்டுவதற்காக அரிவாள்பட்ட இடத்தில் 'குபீரென்று' ரத்தம் பொங்கிச் சிதறியது.

புல்லரிய வந்த பெண் பயந்து பதறித் துடித்தவாறு, ஓடோடிச் சென்று தன் இனத்தவர்களிடம் இதைச் சொன்னாள்.

அனைவரும் அங்கு வந்து புதரை நீக்கிப் பார்த்தார். அன்று கண்ணப்பனின் குடிலில் கல்லாய்ச் சமைந்த கன்றின் திருவுருவம் அது, அந்தக் கருங்கல் திருவுருவத்தின் மேனியிலிருந்துதான் அரிவாள் பட்டு குருதி பொங்கிப் பெருகிக் கொண்டிருந்தது.

அந்தப் பாமர மக்களுக்கு இந்த அதிர்ச்சியூட்டும் அற்புதத்துக்கு விளக்கம் புரியவில்லை. அப்போது குளித்து விட்டு மந்திரங்களை ஜெபித்தவாறு அந்த வழியாக வந்த கற்றறிந்த ஞானசீலரான ஒரு நம்பூதிரியிடம் அவர்கள் இச் செய்தியைத் தெரிவித்தனர்.

அவராலும் அதை நம்ப முடியவில்லை. அதன் உண்மை நிலையைப் புரிந்து கொள்ள அங்கே விரைந்து வந்து பார்த்தார்...மறுகணம் மெய் சிலிர்க்க பரவசத்தால் பூரித்து நின்றார்.

காரணம், அந்த பிராந்தியமே ஜகஜ்ஜோதியாகப் பிரகாசிக்கும் வண்ணம் அன்னை பராசக்தி அருட்கோலம் கொண்டு நிற்பதை அவர் கண்டார்.

'தேவி பகவதி' என்று ஆனந்தப் பெருக்குடன் கரம் கூப்பிய நம்பூதிரி உடனடியாக ஆசாரப்படி அன்னைக்குப் பூஜை செய்வதற்காக தன் மனைக்கு விரைந்து சென்று கை நிறைய சுத்த அன்னத்தை எடுத்து வந்தார். ஆனால் நைவேத்தியம் செய்வதற்காக பாத்திரம் எதுவும் கொண்டு வரவில்லை. அருகில் தென்பட்ட சிரட்டையில் (தேங்காய் கொட்டாங்குச்சி) வைத்து அம்பாளுக்கு நைவேத்தியம் செய்தார். (இந்தச் சம்பவத்தின் நினைவாக இன்றும் ரோட்

டானிக்கரை தலத்தில் முதன்முதலில் சிரட்டையில்தான் அன்னை பகவதிக்கு நைவேத்தியம் செய்யப்படுகிறது.

அன்னையின் தரிசனம் பெற்று அவளை முதன் முதலாகப் பூஜிக்கும் பெருமையை அரும்பேருகப் பெற்றவர் எடாத்து நம்பூதிரி. இவர் அந்தப் பகுதியிலேயே மிகுந்த செல்வாக்குப் பெற்றவர். அன்னை பகவதி அங்கே பிரசன்னமாகியிருக்கிருள் என்ற சேதி அந்தப் பகுதியெங்கும் வேகமாக பரவியது.

அக்கம்பக்கத்திலிருந்த நம்பூதிரிகள் எல்லாரும் அன்னை பகவதி புல் அரியும் புலச்சி இனப் பெண் மூலம் வெளிப்பட்டு காட்சி அளித்த இடத்துக்குச் சென்று அன்னையை வழிபட்டனர். தொடர்ந்து தேவிக்கு நிகழ்த்த வேண்டிய பூஜா முறைகளைப் பற்றி ஆலோசித்தனர்.

எடாத்து நம்பூதிரி தன் ஞான அனுமானத்தால், அத்தலத்தில் அம்பாள் மூன்று அம்சங்களுடன் வெளிப்பட்டிருப்பதாகக் கண்டறிந்து கூறினார்.

மகாலட்சுமி—சரஸ்வதி—துர்கை ஆகிய மூன்று அம்சங்களுடன் தேவியின் சக்தி இணைந்து சங்கமித்து வெளிப்படுவதால், தேவி பகவதிக்கு இந்த மூன்று அம்சத்துக்கும் இசைந்த பூஜா முறையை வகுக்கவேண்டும் என்று கூறினார்.

எடாத்து நம்பூதிரியின்பால் பெரும் பக்தி கொண்டவர்கள் மற்றவர்கள். அவருடைய திட்டம் அனைவருக்கும் உகந்ததாகவே இருந்தது. அச்சமயம்,

ஆலய நியதிப்படி ஜோதிடர் மூலமும் அன்னை பகவதியின் பிரசன்னத்தைப் பற்றி ஆருடம் பார்த்தார்கள்.

காளிகுளத்துக் கணியார் என்ற ஆலய ஜோதிடர் பிரசனம் பார்த்தபோது, தேவியோடு மகாவிஷ்ணுவும் பிரசன்னமாகியிருப்பது தெரிந்தது.

கண்ணப்பன் காலத்தில் மகாவிஷ்ணுவும்—மகாலட்சுமியும் கல்லுருவாகிக் காட்சி தந்த அந்தப் பூர்வ கதை பிரசனம் பார்த்தபோது வெளிப்பட்டது.

எனவே, இத்தலத்தில் லட்சுமி—சரஸ்வதி—துர்கை என்ற மூன்று சக்தி அம்சங்களாக இருக்கும் அன்னை பகவதி, லட்சுமி—நாராயணனாகப் பிரசன்னமாகியிருக்கும் அபூர்வ சக்தி சங்கமும் அங்கு நிலைபெற்றிருப்பதால், அதற்கேற்ற படி பூஜா முறையை நியமித்து நடத்த முடிவு செய்யப் பட்டது. அதன்படி நடாத்து நம்பூதிரி பூஜா முறையை நிர்ணயித்தார்.

அச்சமயம் ஒரு விசித்திரமான சிக்கல் அங்கே உருவாகியது...

அதை அங்கு இருந்த நம்பூதிரிகளாலும், மற்றவர்களாலும் தீர்க்க முடியவில்லை. தீரா வினையாவும் தீர்த்தருளும் தேவி பகவதியோ, மிக அபூர்வமான முறையில் அதைத் தீர்த்தருளினாள்...

மலர்கள் இனத்தால் ஒன்றானாலும் குணத்தால் ஒன்றிலிருந்து மற்றொன்று வேறுபட்டிருக்கும். அவற்றின் மகரந்தங்களும் தனித்தனியானவை.

அது போல், வல்லமை ஒன்றானாலும் மனு காக்க—மண்ணில் எண்ணற்ற திருத்தலங்களில் எழுந்தருளிய லோகமாதாவின் அருளிலும் அந்தந்த தனித் தன்மைகளைக் காண முடிகிறது.

வேதம் செழித்த கேரளத் திரு நாட்டில்—அந்த சோட்டானிக்கரைத் தலத்தில் அன்னை பகவதி முப்பெரும் சக்திச் சங்கமமாய் ஒளி பரப்பி, தீவினைகளைப் போக்குவது—மக்களுக்குப் பகைவர்களால் ஏற்படுத்தப்படும் ஏவல்—பில்லி சூனியங்களையும், பைசாசக் கோளாறுகளையும் நீக்குவது போன்ற சர்வ பரிகாரங்களை வழங்கி, ஓர் காவல் தெய்வமாய் திகழ்வது ஒரு நீண்ட வரலாற்று மகிமை.

அவள் வேதகாலத்து மக்கள் மட்டும் கண்ட நாயகி அல்ல. இன்றும்—நேற்றும் பண்டிதர் முதல் பாமரர் வரை கண்கூடாகத் தரிசித்தும்—உணர்ந்தும் உய்யும் லோகமாதா;

நேற்றைக்கும் இன்றைக்கும் அவள் ஒருபாலம்; ஞானத்துக்கும் அஞ்ஞானத்துக்கும் அவளே ஒளி; பாவத்துக்கும் புண்ணியத்துக்கும் அவளே தீர்ப்பு. அவளிடம் பிரிவுகள் இல்லை; பேதங்கள் இல்லை.

பாமர பக்தன் கண்ணப்பனைக் கருவியாக்கித் தன்னை வெளிப்படுத்திய அன்னை பகவதி, பண்டிதர்களின் பிரச்சினை ஒன்றுக்கும் சிக்கலின்றி தீர்வு கண்ட புதுமைச் செய்தி இது...

அன்னை பகவதி சோட்டானிக்கரையில் எழுந்தருளிய சேதியும், முதன் முதலாக அன்னையை பூஜிக்கும் பாக்கியமும் எடாத்து நம்பூதிரிகளுக்குக் கிட்டியது என்ற செய்தியும், மற்ற நம்பூதிரிகளுக்கும் சமஸ்தானாதிபதிகளுக்கும் மின்னல் வேகத்தில் பரவியது. அச்செய்தியைக் கேள்விப்பட்டு அனைவரும் அன்னையைத் தரிசிக்க அலைஅலையாக வந்தனர்.

அவ்வாறு சேதிகேட்டு அம்பாளைத் தரிசிக்க வந்த ஒரு முக்கியமான குழுவினர்—வேந்த நாட்டிலுள்ள உத்ய துங்கேஸ்வரம் சபா மடத்தைச் சார்ந்த வேத தந்திரிகள்.

இந்த மடம் பல அம்சங்களில் அந்தக் கால கட்டத்தில் பிரக்கியாதி பெற்றிருந்தது.

உலகின் தீவினைகளிலிருந்து மக்களைக் காக்க, அந்தச் சபாவைச் சேர்ந்த வேதாந்த சீலர்கள் அன்னை பராசக்தியை நோக்கி சில மண்டலங்களாக பூஜை நடத்திக் கொண்டிருந்தனர். அந்த சமயம்தான், அன்னை வெளிப்பட்டு காட்சி அருளியிருந்த சேதி அவர்களுக்குக் கிட்டியது.

அச் செய்தியை அவர்களுக்குத் தெரிவித்தது வேறு யாருமல்ல; சாட்சாத் பகவதியே தான்.

அந்த வேத தந்திரிகளுக்கு அசரீரியாக ஓர் அருள் வாக்குக் கிடைத்தது. 'உலக மாந்தர்களைக் கொடிய பாதிப்புகளிலிருந்தும், தீவினைகளிலிருந்தும் காக்க நான் சுயம்புவாக அவதரித்திருக்கிறேன். என்னை அண்டி வந்து சேவிப்பவர்களை எந்தத் தீவினையும் அணுகாது' என்ற இந்த வாக்கைக் கேட்டதும் தாம் வாழ்ந்த வேந்த நாடு முழுவதும் அன்னை வெளிப்பட்டிருக்கிருளா என்று தேடிப் பார்த்தனர் அந்த மடத்தினர்.

வேதங்களும்—வேதமறிந்த நம்பூதிரிகளும் நிறைந்த அந்த வேந்த நாட்டில்தான் அன்னை பகவதி தோன்றியிருப்பாள் என்று அவர்களுக்கு ஓர் நம்பிக்கை.

ஆனுல், ஒளி இல்லாத இடத்திற்கு அல்லவா விளக்கு தேவை...?

அதன்படி வேத ஞானமில்லா பாமர மக்கள் நிறைந்த பகுதியில்—ஒரு புலையர் இனப் பெண்ணை மகிமைப்படுத்துவதுபோல், அவள் மூலம் அன்னை பகவதி வெளிப்பட்டிருந்ததை அந்த வேதஞான நம்பூதிரிகளால் ஊகிக்க முடியவில்லை.

அவர்களுடைய வேதஞானம்—அன்னை பராசக்தியை பூரணமாக அறிந்து கொள்ளும் அளவு தீட்சண்யம் பெற்றிருக்கவில்லையோ, என்னவோ!

தேவியை அறிய வேதம் தேவையா? அவளைத் தேடும் இதயம் ஒன்று போதாதோ? இதய சுத்தியோடு அவளைத் தேடினுல்—இருளுக்கு ஒளியாய், இல்லாமைக்குச் செல்வமாய், வறட்சிக்கு வான் மழையாய், வாழ்வுக்குக் காவலாய் தோன்றிக் காத்தருள மாட்டாளோ எம் ராஜ ராஜேஸ்வரி.

செவிவழிச் செய்தியாய் சோட்டாணிக்கரை தலத்தில் அன்னை வெளிப்பட்டதைக் கேள்விப்பட்டு, அந்த உதயதுங்கேஸ்வரம் சபா மடத்தைச் சேர்ந்த வேத தந்திரிகள் அன்னையைத் தரிசிக்க அங்கு சென்றனர்.

அங்கே ஜோதிஸ்வருபமாய் ஒளிர்ந்த பராசக்தியின் அற்புத பிரசன்னத்தைக் கண்டு அவர்கள் தரிசித்து நின்ற போதுதான் ஒரு லௌகீகப் பிரச்சினை உருவாகியது. அதாவது,

முதன் முதலாக அன்னைக்கு பூஜை செய்தவரோ எட யாத்து நம்பூதிரி.

ஆனால் புலையர் பெண்ணின் அரிவாள் பட்டு செம்மைக் கோலமாய் அன்னை வெளிப்பட்ட இடமோ, எடயாத்து நம்பூதிரிகளின் எல்லைக்குச் சில அடிகள் தூரத்திலுள்ள வேற்று எல்லை...

தம் எல்லைக்கு அப்பாற்பட்ட இடத்தில் இருக்கும் அன்னைக்கு எப்படி எடயாத்து நம்பூதிரிகள் பூஜை செய்ய லாம்...?

—இது தான் அவர்கள் மத்தியில் தோன்றிய பிரச்சினை,

விசித்திரமான இந்தப் பிரச்சினைக்கு விடை காண முடியாமல் வேந்த நாட்டு நம்பூதிரிகளும், மற்றவர்களும் குழம்பி நின்றனர்.

முதலில் தரிசித்த சிரட்டையால் பூஜை செய்த எடையாத்து நம்பூதிரியின் உரிமையையும் அவர்களால் புறக் கணிக்க முடியவில்லை. அதே சமயம் அந்த நம்பூதிரியின் எல்லையைக் கடந்து அம்பாள் வெளிப்பட்டிருக்கும்போது, தொடர்ந்து அன்னைக்கு பூஜை செய்யும் உரிமையை அவருக்கு அளிக்கவும் அவர்கள் மனம் ஒப்பவில்லை.

ஒரு நாள் முழுவதும் இதைப்பற்றி தரிசித்துவிட்டு, ‘மறுநாள் அன்னையின் சந்நிதியில் கூடித் தீர்வு காணலாம்,’ என நிச்சயித்துவிட்டுக் கலைந்து சென்றனர்.

மறுநாள்—

அவர்கள் அங்கு வந்த போது அம்பாள் முன்பிருந்த இடத்தில் இல்லை.

பதட்டத்துடன் தேடிப் பார்த்தபோதுதான் தேவி இடம் பெயர்ந்து வேறொரு இடத்தில் காட்சி அளிப்பதைக் கண்டனர்.

இப்போது அன்னை காட்சியளித்த இடம் எடயாத்து நம்பூதிரியின் நிலம்.

''எல்லை கடந்து நின்று அருளாட்சி செய்து—எல்லையற்ற அருள் பொழிய இந்த மண்ணகத்து எல்லைக்கு வந்திருக்கும் என் எல்லையை நிர்ணயிக்க உங்களால் முடியுமா? அதைத் தீர்மானிக்க வேண்டியவள் நானேதான்,'' என்று அந்த வேதம் கற்றவர்களுக்கு உணர்த்துவதுபோல், அவளே இடம் பெயர்ந்து அந்த பிரச்சினையைத் தீர்த்துவிட்டாள். பூஜை முறையைத் தொடர்ந்து நிர்வகிக்கும் பேற்றை எடயாத்து நம்பூதிரியே பெற்றார்.

ஃ ஃ ஃ

இன்று—சோட்டானிக்கரை ஆலயத்தில் பவளமல்லி என அழைக்கப்படும் இடம். ஆதியில் அம்பாள் காட்சி அளித்த இடம்.

அதற்கு வடகிழக்காகச் சிறிது தூரத்தில் அமைந்திருக்கும் அம்பாளின் கருவறைதான் அம்பாள் இடம் பெயர்ந்து காட்சி தந்த இடம்.

அந்த ஆலயத்தை உருவாக்கியவர் எடயாத்து நம்பூதிரிகள்...

இங்கே சுயம்புவாக (ருத்திராட்ச மர அம்சமாய்) எழுந்தருளியிருக்கிறாள் தேவி. அவள் கல்லுருவில் லட்சுமி நாராயணராகக் காட்சியளித்த திருக்கோலம், அந்த சுயம்புவான ருத்திராட்ச மரவுருவிற்குப் பின்புறமாக அமைந்திருக்கிறது.

காலம் காலமாக மனுகோடிகளுக்கு நெறிகளை உணர்த்தி, அவர்களை நெறிப்படுத்தி வாழ்வளித்தவாறு

ருத்திராட்ச மரவுருவில் காட்சியருளும் அன்னை பகவதியை மெய்யுருகித் தரிசித்து நிற்கிறோம்.

அச்சமயம் அந்தக் கருவறையில் நிகழும்ஓர் அதிசயத்தை, ஆலய மேல் சாந்தியான பெரிய திருமேனி ராமச்சந்திர ஆசாரியார் நமக்கு சுட்டிக் காட்டித் தெரிவிக்கிறார்.

'திரு' அனைத்துக்குமே கருவான அன்னை பகவதியின் ஆலயக் கருவறையிலேயே, அவளுடைய மகிமை அற்புதங்கள் உலகுக்கு வெளிப்படத் தொடங்குகின்றன.

பொதுவாக ஆலயங்களில் கருவறையில் அபிஷேக நீர் வெளியேறுவதற்கு வடபுறமாக வழியிருக்கும். அதன் வழியே வெளிப்படும் அபிஷேக நீரை தீர்த்தமாக பக்தர்கள் எடுத்துக் கொள்வார்கள். ஆனால், சோட்டானிக்கரை பகவதி தேவியின் ஆலயத்தில் அபிஷேக நீர் வெளியே செல்வதில்லை. காரணம், கருவறையின் தளமே மணல் பாங்காகத்தான் இருக்கிறது. அபிஷேக நீரெல்லாம், அந்தத் தளத்து மணற்பகுதிக்குள் ஊறிச்சென்று, சுமார் ஒன்றரை பர்லாங்கு தூரத்திலுள்ள ஒனக்கூர் தீர்த்தக் குளத்திற்குள் இறங்கிவிடுகிறதாம்.

''இப்படியொரு கருவறை அமைப்பு வேறு எந்தத் தலத்திலும் இல்லை'' என்கிறார், சோட்டானிக்கரை ஆலய மேல் சாந்தியான திரு. ராமச்சந்திர ஆசாரியார்.

இன்னொரு அதிசய செய்தியையும் அவர் குறிப்பிட்டார். ருத்ராட்ச சிலையாக எழுந்தருளியிருக்கும் அன்னை பகவதி திருவுருவுக்குள் பூரான் போன்ற எளிய ஜந்துக்கள் நிறைந்திருக்குமாம்.

''பூரான் தேவியின் சிலையிலிருப்பதைப் பற்றி ஆச்சரியப் படுவதற்கோ திகைப்பதற்கோ அவசியமில்லை. காரணம், பூரான் கலைமகளான சரஸ்வதியின் வாகனம் என்பார்கள். தேவி பகவதியோ இந்தத் தலத்தில் மூன்று

அம்சங்களாக எழுந்தருளியிருக்கிருள். காலையில் சரஸ்வதி, பின்பு மகாலஷ்மி, இரவில் துர்க்கை. எனவே அவளுடைய சரஸ்வதி அம்ச வாகனமாக 'பூரானை'த் தன் சிலைக்குள்ளே அவள் வைத்திருப்பது இயல்பான விஷயம்தான். முருக னுடைய திருத்தலங்களில் மயில் வளர்ந்து வருவதில்லையா. அப்படி.'' என்கிருர்.

ஒருமுறை, அந்தத் தலத்தில் பூஜை செய்த மேல் சாந்தி ஒருவர், இந்த விஷயம் தெரியாமல் சிலையி லுள்ளபூரான்களைப் பார்த்துவிட்டு அசூயைப் பட்டு, 'டெட் டாலை' ஊற்றி சிலையை அபிஷேகம் செய்து விட்டாராம். அதன் பலனை சில நாட்களுக்குள்ளேயே அந்த மேல் சாந்தி அனுபவிக்க நேர்ந்ததாம். (ஒருகுறிப்பிட்ட நோயால் அவர் அவதிப்பட்டாராம். அந்த நோய் இன்னதென்று வெளியிட வேண்டாமென்று மேல் சாந்தி கேட்டுக் கொண் டார். அத்தோடு தன் தவற்றை உணர்ந்த அந்த குறிப் பிட்ட நம்பூதிரி அன்னை பகவதியை வேண்டியதன் பலனுக அந்த நோய் குணமாகியதையும் தெரிவித்தார்.)

மேல் சாந்தி குறிப்பிட்ட, இன்னெரு செய்தியும் திகைப் பூட்டுவதாக இருந்தது. சோட்டானிக்கரை ஆலயத்தில் இரவு பூஜைக்குப் பின் யாரையுமே தங்க அனுமதிக்க மாட்டார்களாம். அப்படி யாராவது தங்கிஞல் அர்த்த ஜாமத்தில் யாரோ அரூபமாக அவர்களை அடிப்பது போல் உணர்வார்களாம். பித்தளைப் பாத்திரங்கள் வைத்திருந் தால்கூட, மறுநாள் காலையில் வந்து பார்க்கும் போது, அவை நசுங்கி உருக்குலைந்து கிடக்குமாம். அதனுல் தான், இப்போதும் ஆலயத்திலுள்ள பூஜைப் பாத்திரங்களை யும், அம்பாளின் உற்சவ சிலையையும்(பஞ்ச லோகத்தினு லானது)அருகில் கீழ்ப் புறமாக இருக்கும் 'கீழ்க்காவு' என்ற ஆலயத்தில் எடுத்துக்கொண்டு போய் வைத்து விடுகிருர்கள்.

இதைப் பற்றி, ''இரவுக் காலம் அம்பாளின் ஏகாந்த காலம். அவள் அந்த நேரத்தில் பரிவாரத் தேவதை

களுடனும் உக்கிரமான நிலையில் இருக்கிருள். அந்த தெய்வ சாந்நித்யத்தில் மற்றவர்கள் பிரசன்னமாயிருப்பது தவறு. அதனுல்தான் இந்த உபாதைகள் ஏற்படுகின்றன,'' என்று விளக்கம் கூறினுர் மேல் சாந்தி.

இதைப் பற்றி ஒரு சுவாரஸ்யமான வரலாற்றுச் செய்தியும் அத்தலத்தில் கூறப்படுகிறது...

சில காலத்திற்கு முன் அந்தப் பகுதியில் திருடர் பயம் அதிகமாம். மம்மாலி, செக்கன்னன், இட்சகன் என்ற சில பயங்கரமான கொள்ளைக்காரர்கள், மக்களை அச்சுறுத்திப் பொருள்களைக் கவர்ந்து, யாருக்கும் கட்டுப் படாமல் மூர்க்க வாழ்வு நடத்திக் கொண்டிருந்தார்களாம். அப்போது, ஆலயங்களுக்குள் புகுந்து, விக்கிரகங்களின் மேலிருந்து ஆபரணங்களைக் கவர்ந்து செல்வதும் அவர் களுக்குப் பழக்கப்பட்ட ஒரு வினை. இந்து ஆலயங்கள் மட்டுமல்லாது கிறிஸ்துவ ஆலயங்களும் அவர்களுடைய கொள்ளைக்கு இலக்காகியிருந்ததாம். அந்த மூர்க்கர்களின் திருஷ்டி, ஒருநாள் சோட்டானிக்கரை ஆலயத்தின் பேரிலும் விழுந்தது. அங்கு ஏராளமான நகைகளும், பொற்காசு களும் இருப்பதாக அவர்களுக்கு செய்தி கிடைத்தது. அவற்றைக் கொள்ளையடிப்பதற்காக தகுந்த சமயத்தை எதிர்பார்த்திருந்தார்கள்.

ஒருநாள் இரவு அர்த்தஜாம நேரம். பழிக்கஞ்சாத இக்கொடிய கொள்ளைக்காரர்கள், மிகவும் பயங்கரமான ஆயுதங்களுடன் அன்னையின் ஆலயத்திற்கு வந்து, எல்லைச் சுவரைத் தாண்டி உள்ளே குதித்தனர்.

மறுகணம் அவர்களை அதிர்ச்சிக்குள்ளாக்குவதுபோல், எங்கும் தீபஜோதி, நூற்றுக்கணக்கான தீவட்டிகளைப் பக்தர்கள் ஏந்தி நிற்கும் காட்சியும், பல யானைகள் மீது அம்பாளும், மற்ற பரிவார தேவதைகளும் கோலாகலமாகப் பிரதட்சணம் வரும் காட்சியும், அந்த கோலாகலத்தின்

சிகரமாக பஞ்ச வாத்திய ஓங்கார ஓசையுமாய் எங்கும் ஒரு ஜகஜ்ஜோதியான உற்சவ கோலாகலம்.

அதைக் கண்ட திருடர்கள், 'ஒரு உற்சவநாளில் தவறிப் போய் வந்து விட்டோமே', என்று எண்ணியவர்களாக, கூட்டத்தோடு கூட்டமாகத் தாமும் கும்பிட்டு விட்டு, அவசர அவசரமாக ஆலயத்தை விட்டு வெளியேறி ஓடி விட்டார்கள்.

ஃ ஃ ஃ

இரவு நேரங்களில் சோட்டானிக்கரை ஆலயத்தினுள் தங்குவதற்கு மற்றவர்களுக்குத் தடையானுலும். ஆலயத்தில் பணிபுரியும் மேல் சாந்திகள் அங்குதான் தங்க வேண்டுமென்பது நிர்ப்பந்தம். ஏனென்ருல், ஆலய நியதிப் படி மேல் சாந்தி தாம் பணி புரியும் காலம் முழுவதும் ஆலயத்துக்குள்ளேயே இருக்க வேண்டும். தன் மனைவி மக்களைக்கூடச் சந்திப்பதற்குச் சொந்த வீட்டுக்குச் செல்லக் கூடாது. தாம்பத்திய உறவிலிருந்து பூரணமாக விலகி யிருக்க வேண்டும். வேண்டுமானுல். மனைவி, மக்கள் அவரை ஆலயத்தில் வந்து பார்த்துச் செல்லலாம். இப்படி யொரு கடுமையான மனவிரதம் பூண்டு ஆலயத்திற்குள் தங்கியபடியே அவர்கள் பணி புரிய வேண்டும். இன்றும் அந்த முறை வழுவில்லாது கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது.

அப்படி பணி புரிந்து வந்த நம்பூதிரிக்கு அம்பாள் காட்சியளித்த ஒரு சுவையான வரலாறு இது......

சில காலத்திற்கு முன் மேல்சாந்தியொருவர், (செம்மங்க நாட்டு நம்பூதிரிபாடு) ஆலய நியதிப்படி நள்ளிரவில் ஆலயத்தினுள் அயர்ந்து தூங்கிக்கொண்டிருக்கும் போது, அவருடைய படுக்கையை நோக்கி 'கலீர்...கலீர்' என்ற ஒரு சதங்கையொலியும், வளையல் ஒலியும் கேட்டது. "பெண் வாடையே இல்லாத அந்த தெய்வீக சந்நிதியில் இது என்ன ஒலி?' என்று திடுக்கிட்டுப் பதறியவராய் 'அதிர்ச்சி யுடன் எழுந்து சுற்றும் முற்றும் பார்த்தார் நம்பூதிரி.

சதங்கை ஒலிக்க இளம் நங்கை உருவில் தேவி அவரருகே வந்து நிற்பதைக் கண்டார்.

தேவியைக் கண்டதும் பதறி எழுந்தார் நம்பூதிரி அவரால் பேச முடியவில்லை.

அவரிடம் பேசுவதற்காக எழுந்தருளியிருந்த தேவி பேசினுள் :

''நம்பூதிரி, உனது வேத மந்திர உச்சாடனத்தால் நான் மனம் நிறைகிறேன். ஆனுல் ஆலயத்து பூஜா முறைகள் தான் எனக்கு நிறைவாக இல்லை. வேதாகம முறைப்படி பூஜை முறைகளை அமைத்து பூஜையை நடத்துக'' என்றருளி மறைந்தாள்.

''அம்பாள் கட்டளைப்படி அந்த நம்பூதிரியால் மாற்றியமைக்கப்பட்ட பூஜைமுறைகள் இன்றும் அத்தலத்தில் நடைமுறையிலிருந்து வருகின்றன,'' என்ருர் சோட்டானிக்கரை ஆலயத்து மேல் சாந்தி ராமச்சந்திர ஆசாரியார்.

அதிகாலையில் நாலரை மணிக்கே அன்னை பராசக்தி மூகாம்பிகை அம்சமாக—சரஸ்வதியாக வெள்ளை வஸ்திரம் பூண்டு காட்சியருளுகிருள். காலை ஏழு மணி வரை அந்த உஷத் கால திருக்காட்சி காணும் பாக்கியத்தைப் பெறுவதற்காக, முந்திய நாள் இரவே அத்தலத்தில் வந்து தங்கியிருக்கும் பக்தர்கள் ஏராளம். ஏழு மணிவரை மூகாம்பிகை அம்மன் இத்தலத்தில் அருள் காட்சி வழங்கியபின் மூகாம்பிகை தலத்துக்குச் செல்வதாக ஐதீகம்.

எட்டு மணிக்கு பந்தீரடி பூஜை; எட்டு மணி முதல் பன்னிரண்டு மணி மத்தியான பூஜை வரை, அம்பாள் மகாலட்சுமியாக சர்வாலங்கார பூஷிதையாக எழுந்தருளியிருக்கிருள். உரிய அலங்காரத்துடன் தங்கக் கவசம்—ருத்தராட்சமாலை—பஞ்சதாலி; வலதுகரத்தில் சக்கரம்—இடது கரத்தில் சங்கு; வலது கீழ்க்கரத்தில் வரத உறஸ்தம், இடது கீழ்க்கரத்தில் அபய ஹஸ்தம்...இவற்றுடன் அம்பாள் கொண்ட

லட்சுமிகரமான திருக்கோலம், ஏழைபருக்கும், பிணியாள ருக்கும் வல்வினை போக்க அவள் கொண்ட அருள்காட்சி...

அப்போது அவள் சந்நிதியில் முறையிட்டு ஆடி அலமலந்து நிற்கும் பிணியாளர்களின் குறைகளைக் கேட்டு இரவில் துர்கையாக மாறி, பிணி போக்கப் போர்க்கோலம் பூணுகிருள்.

'இல்லை' என்று வந்தோர் அவள் சந்நிதியில் பெருமல் போனதே இல்லை...

'பிணி' என்று அவள் சந்நிதிக்கு வந்து விரதம் காத்தோர் பிணி நீங்காது திரும்பியது இல்லை.

—இது இன்று நேற்று இல்லை. அவள் சந்நிதியில் ஆண்டாண்டு காலமாக நிகழும் அதிசயம்.

அன்னை பகவதியின் சந்நிதிக்கு மாதம் ஒருமுறையாவது வந்து தரிசனம் செய்யத் தவருத கே. ஆர். மேனன் சொல் கிருர் : ''கேரளாவிலே பகவதியின் அருள் மூணு தலத்திலே உச்சாடனமா இருக்கிறது. சபரிமலை ஐயப்பன், குருவா யூரப்பன்—சோட்டானிக்கரை பகவதி... இந்த மூன்று தலங்கள் தாம். இதிலே ஒரு விசேஷம், அம்மாவோட நாராயணனும் இருக்கிருர். எப்பவும் நமக்கு அனுசரணை யாக வாழ்வளிக்கிறவள் அம்மாதான். நம்முடைய குற்றம் குறைகளையெல்லாம் மன்னித்து அம்மாதான் அருள் புரிவாள். அதுதான் இந்தக் கேரளத்தோட மகிமை...'' என்கிருர்.

இந்தக் கூற்றை ஊர்ஜிதப்படுத்துவதுபோல், மேல் சாந்தி ராமச்சந்திர ஆசாரியார் கூறுகிருர் :

''தெய்வம் ஒரு நாளும் பொய்க்கின்றதில்லே... ஆனு, மனுஷன் எப்போதுமே தெய்வத்தோட சலுகை எடுத்துக் கொள்கிற மாதிரி தப்பு செய்கிறவன். இந்தத் தலத்திலே பஜனம் (விரதம்) இருக்கிறதுக்குக் கண்டிப்பான கட்டு

திட்டம் உண்டு. 'விரதம் இருக்கிறவங்க கோயில் எல்லைப் பகுதியிலுள்ள அம்பாள் மடத்தில்தான் இருக்கவேண்டும். மகா பஞ்சகவ்யம், என்ற அம்பாள் ஆலய நெய்யைச் சாப்பிட்டுவிட்டு அப்புறம் கோயிலில் கொடுக்கிற சாதத்தைத் தான் சாப்பிடணும்... இப்படி விரதம் இருந்தால் பில்லி சூன்யம் பிசாசு பாதிப்பு போன்ற எந்தப் பிணி இருந்தாலும் பன்னிரண்டு நாள் பஜனம் இருப்பதற்குள் குணமாகிவிடும். முன்னுளிலெல்லாம் ஜனங்கள் அதைச் சுத்தமாகக் கடைப் பிடித்தார்கள். குறிப்பிட்ட நாளுக்குள் குணமாகியும் விடும். ஆனுல் இப்போது பக்தர்கள் இந்தப்படி சுத்தமாக விரதம் இருப்பதில்லை. சிலசில தவறுகள் செய்து விடுகிருர் கள். அதனுல் குணமாவதிலும் சில நாள் முன்பின் ஆகிவிடு கிறது. ஆனுலும் பிணியாக வந்து யாருமே குணமாகாமல் சென்றதில்லை. அம்மா தவறு செய்பவர்களைச் சிறிது சோதித் தாலும் கடைசியில் நன்மையே செய்து அனுப்புகிருள்... என்ருர்.

அது முற்றிலும் உண்மை.

எண்ணற்ற பசுக்களைப் பலியிட்டு கோர பூஜை செய்து, பல தவறுகளுக்கு இலக்காக இருந்த பாமரன் கண்ணப்பன் மூலம் தான் இன்று அத்தலத்தில் பல அற்புதங்களை நிறை வேற்றுகிருள், அம்பிகை.

ஆம்; அன்று பாமரன் கண்ணப்பனுக இருந்தவன்தான் பின்னர் வில்வ மங்கள ரிஷியாக அவதரித்து, சோட்டாளிக் கரை தலத்தில் கீழக்காவு பீடத்தில் பிசாசு ஏவல்களை சம்ஹரிக்கும் காளிதேவியை பிரதிஷ்டை செய்தார்.

அது பிணியாளர்களுக்குச் சரணுலயம். சித்தம் கலங்கியவர்களுக்கும், பில்லி சூன்யம், துர் ஆவிகளின் சேஷ்டை போன்றவற்ருல் பாதிக்கப்பட்டவர்களுக்கும் அன்னை பகவதியின் ஆலயம் ஒரு மருத்துவமனை.

ஆம்; மனநோயாளியும் சரி, பேய் பிசாசு சேஷ்டை களால் பாதிக்கப்பட்டவர்களும் சரி, பகவதி அம்மன்

சந்நிதியில் 'ஆடி' விட்டால் பரிகாசம் உடனடியாகக் கிடைக்குமாம்.

''பகவதி அம்மா சந்நிதியிலே ஆடற பேய் பிசாசுகளே கடைசியில் கீழக்காவு சந்நிதியிலே இருக்கும் பத்ரகாளி பிடித்து அடக்கி விடுவாள்'' என்ருர் ஆலயத்தில் 'மாசப் படி' பணியாற்றும் கே. கே. நாயர்.

ஃ ஃ ஃ

அது ஒரு பிரமிக்கத்தக்க—அன்ருடம் நிகழும் அம்பாளின் திருவிளேயாடல் அந்த சந்நிதியில்.

பேய்களின் பிடியில் சிக்கிய பெண்கள் தாமாகவே ஆணியை எடுத்து ஆலயத்திலுள்ள பலாமரத்தில் அடித்து விட்டு வெளியேறும் காட்சி பிரமிப்பூட்டும் காட்சி......

ஆவிகளே விரட்டும் இவ்வினே நிகழும் இடம்தான் 'கீழக்காவு' என்ற சந்நிதி.

இச்சந்நிதியை அமைத்தவர் வில்வ மங்கள சுவாமிகள். இவர்தான் பசுக்களேப் பலி கொடுத்து பாமர பூஜை செய்த கண்ணப்பனின் மறுபிறவி என்கிறது அத்தல வரலாறு...... வரும்போது சோட்டாளிக்கரை தலத்தருகே திடீரென்று ஜகஜ்ஜோதியான ஒளி தோன்றியது. அதைக்கண்டு வியந்து பிரமித்து அதைத் தொழுது நின்ருர் சுவாமிகள். திடீரென்று அந்த ஒளியினுள் அம்பிகையின் அபூர்வ உருவம் வானளாவித் தோன்றியது. பதினெட்டு கரங்களுடன் திருக்காட்சி அருளிய அன்னேயைக் கண்டு மயங்கி மெய் சிலிர்த்து நின்ருர் வில்வ மங்கள சுவாமிகள்.

இது நிகழ்ந்தது மாசி மாதம் மகம் நட்சத்திர மாலேப் பொழுதில். (இன்றும் இந்த நிகழ்ச்சியை ஒட்டி அத்தலத்தில் அம்பாளின் விசேஷ மாசி மாதம் திருநாள் விழாவாகக் கொண்டாடப்படுகிறது. எண்ணற்ற மக்கள் திரள்வார்கள். அந்த வேளேயில் பெண்கள் வந்து வணங்கினுல் சகல

சௌபாக்கியங்களும் சித்தி அளிப்பதாக ஓர் அனுபவ பூர்வமான நம்பிக்கை நிலைத்திருக்கிறது. வரும் மக்கள் கூட்டத்தில் மிகப் பெரும் பகுதி பெண்களே!)

இப்படியோர் அபூர்வ அம்பாள் திருக் காட்சியைக் கண்டு தரிசித்தும் வில்வ் மங்கள சுவாமி அத்தலத்தில் ஏதோ ஓர் அற்புதம் நிகழப் போகிறது என்ற உணர்வின் உந்துதலால் அன்று அங்கேயே தங்கி விட்டார்.

சூரிய அஸ்தமனம் ஆகி இரவு ஆகியதும் அவர் எதிர் நோக்கிய ஓர் அற்புதம் அங்கே நிகழ்ந்தது...

அவர் தங்கியிருந்த இடத்தருகேயிருந்த தீர்த்தத்தில் அந்த இரவு வேளையில் கோடி சூரியப் பிரகாசத்துடன் ஓர் ஒளி தோன்றியது.

தீர்த்தத்துக்குள் அந்த ஒளி பிறந்த இடத்தை நோக்கி சுவாமிகள் இறங்கிச் சென்றார்....

அருகில் சென்று பார்த்ததும் வியப்பால் புல்லரித்து நின்றார் வில்வ மங்கள சுவாமிகள்.

அங்கே...

வில்வ மங்கள சுவாமிகளுக்குத் தரிசனம் அளிக்க, அந்த இரவில் ஒளி வீசி தீர்த்தத குளத்தில் எழுந்தருளியிருந்தவள் வேறு யாருமல்ல;

அம்பிகைதான்!

'உலக அஞ்ஞான இருளுக்கு ஒளியாய் திகழும் பெருமாட்டி தானே என்று சொல்லாமல் சொல்வது போல், ஒளிமயமாக சிலை உருவில் வெளிப்பட்டு நின்றாள் தேவி.

திடிரென்று அந்த ஞானமகானின் எண்ணத்தில் ஓர் ஒளி பிறந்தது.

அந்த இரவில், நீரினுள் அமிழ்ந்து காட்சியளித்திருக்கும் அன்னை, தன் தரிசன கோலத்தின் மூலமாகவே ஒரு தெய்வீகச் செய்தியை உலகுக்கு உணர்த்தி நிற்பதை அவ ரால் புரிந்து கொள்ள முடிந்தது.

அன்னை—இரவில், நீரினுள் அமிழ்ந்து ஒளி வீசி நின்றாள் என்றால் உலகதுயரம் என்ற நீருக்குள் அமிழ்ந்து அதிலிருந்து மீட்சிக்கு வழி தோன்றாத—அச்சம் என்ற இருளில் திக்குத் தெரியாது தவித்துக்கொண்டிருக்கும் மனுக் கோடிகளுக் கெல்லாம் ஒளியாய் நான் இருக்கிறேன், என்று அம்பிகை கூறாமல் கூறி நிற்பது போலிருந்தது, வில்வ மங்கள சுவாமி களுக்கு.

'உலகத்தில் தீய சக்திகளின் வாதனையால் சிக்கித் தவிக்கும் மனித ஜீவன்களுக்கு மீட்சி தரவே அன்னை இவ்வாறு காட்சியருளியிருக்கிறாள்; அவள் திருவுள்ளத்துக் கருணை' உலக மாந்தருக்குக் கிடைக்க ஏற்பாடு செய்ய வேண்டும், என்ற உணர்வின் உந்துதலால், உடனடியாக அந்த அம்பாளின் சிலைச்சுரிய வழிபாட்டு முறையை நிர்ண யித்து அவளை தக்க இடத்தில் பிரதிஷ்டை செய்தார் அவர்.

அந்த இடம்தான் சோட்டாணிக்கரை ஆலயத்தை ஒட்டி கீழ்ப்புறமாக இருக்கும் 'கீழ்க்காவு' சந்நிதி. அங்கே நீரினுள் தோன்றி வெளிப்பட்ட தேவியை பிரதிஷ்டை செய்து, தீமைகளை சம்ஹரிக்கத் தோன்றிய அம்பாளுக்கு 'பத்ரகாளி' என்ற திருநாமத்தையும் உரித்தாக்கினர்.

அன்று முதல் சோட்டாணிக்கரை தலத்துக்குச் சென்று பிணி நீங்க முறையிடும் பக்தர்களின் கோரிக்கைகளை முற்றாறு தீர்த்து வைக்கும் திருச் சந்நிதி கீழ்க்காவு பத்ரகாளி யினுடையதாகவே திகழ்கிறது...

ஃ ஃ ஃ

திருவனந்தபுரத்திலுள்ள ஒரு பெண்மணி கூறுகிறார்:

“மூன்று ஆண்டுகளாக என்னை வாட்டிய பிணி குணமான வரலாறு... எனக்கு வந்த பிணி தலை சுற்றல், மயக்கம், தளர்ச்சி, ஆகாரம் செல்லாமை —இருந்தாற்போலிருக்கு மயக்கம் வந்து தளர்ந்துகிடந்தால் அரை மணி நேரம் கிடக்க நேரிடும். பல வைத்தியங்கள் செய்தும் குணமாகவில்லை. நரம்புக் கோளாறு என்று பல ஸ்பெஷலிஸ்ட்டுகளிடம் காண்பித்து சிகிச்சை பெற்றேன். பயனில்லை. இனி வைத்தியத்தில் இது போகாது, என்றிலிருந்து வருத்தமுடன் இருந்தபோது தான், ‘சோட்டாணிக் கரை’ ஆலயத்தைப் பற்றிய விவரம் அறிந்தோம்.

“ஆலயத்திற்குப் போக வேண்டிய ஏற்பாடுகள் எல்லாம் செய்து எர்ணுகுளத்திலுள்ள ஓர் உறவுக்காரர் வீட்டில் தங்கினோம். அன்று சாயங்கால வேளையிலேகூட மயக்கம் வந்தது. மறுநாள் காலை கோயிலுக்குச் சென்று தேவியைத் தரிசனம் செய்து வந்தோம். அங்கு சென்ற போதே உடம்பில் ஒருவிதத் தெம்பு வந்தது போல கோவிலை சுற்றிச் சுற்றி பிரதட்சணம் செய்தேன் கொஞ்சம் தூரம் சேர்ந்து நடக்க முடியாத எனக்கு எத்தனை சுற்று சுற்றியும் ஒருவித தளர்ச்சியும் உண்டாகவில்லை. அன்றிலிருந்து இன்றுவரை அதாவது பதினெட்டு ஆண்டுகளாக நான் ஒருவித நோயும் இல்லாமல் சுகமாக இருந்து வருகிறேன்.

வைத்தியத்தினால் குணமாகாத பிணியும் சோட்டாணிக் கரை ஆலயத்தின் தேவி மகிமையால் குணமாகும் என்பது அனுபவபூர்வமாக நான் கண்ட உண்மை.”

இந்த சகோதரிக்கு ஏற்பட்டதுபோல் உடற்பிணியாளர்களும், தீய ஆவிகளால் ஆக்கிரமிக்கப்பட்டவர்களுமாய் குழுமி கையேந்தி நிற்கும் நொந்த உள்ளங்களை அந்த ஆலயத்தில் பார்க்கிறோம். அவர்களுள் ஓர் இளம் பெண்ணைக் குறிப்பிட்டுக் காட்டி, ஆலயப் பணிபாளரான மேனன், “இந்தப் பொண்ணு ரொம்ப நாளா கோயில்லே விரதம் இருக்குது. ஒரு கெட்ட ஆவி பிடித்ததால்தான் அந்தப் பெண்ணுக்கு வாதை; சரியாகவே சாப்பிடுவதில்லை; ரொம்ப நாள் வரைக்கும் அம்பாள் சந்நிதியில் ஆடாமல் தான் இருந்தது. இப்போது ரெண்டு நாளாக அம்பாள் முன்னால் ஆடுகிறது. இன்றைக்கோ நாளைக்கோ குருதிப் பூஜையிலே அவளுக்கு விமோசனம் கிட்டிவிடும்” என்றார்.

அவர் உத்தேசமாகச் சொன்ன வாக்கு தெய்வ உத்தாரம் போலவே அன்று பலித்துவிடக் கண்டோம். ஆனால், குருதிப் பூஜையின் போது அந்தப் பெண்மணி அனுபவித்த துயரங்கள், வேதனைகள்...

இரவு எட்டு மணிக்குமேல் சோட்டாணிக்கரை பகவதி சந்நிதியில் நடை சாத்தியபின் அங்கு பணி புரியும் மேல் சாந்தி கீழக்காவு பத்திரகாளி சந்நிதிக்குச் செல்கிறார். அவருடன் நாமும் செல்கிறோம்.

இந்த சந்நிதியை நாம் நெருங்கும்போதே, பல அமானுஷ்யமான ஆர்ப்பாட்டக் குரல்கள் நம் செவிகளில் ஒலிக்கின்றன. சுற்றிலும் மதில்சுவர் உள்ள கீழக்காவு சந்நிதிக்குள் ஒருவித அச்ச உணர்வுடன் நுழைகிறோம். மேல் சாந்தியின் வரவை எதிர்பார்த்துப் பெரும் கூட்டம் கூடி யிருக்கிறது. சந்நிதிக்கு அடுத்தாற்போல் கயிறுகளைக் குறுக்கே கட்டி மக்கள் சுதந்திரமாக சந்நிதியின் முன்புறத் துக்குள் நுழைந்துவிடாதபடி தடுத்திருக்கிறார்கள். அந்தக் காவலுக்குட்பட்டு காலியாக வைக்கப்பட்டிருக்கும் இடம் தான் குருதிப் பூஜை நிகழும் இடம்.

சுற்றித் தடுக்கப்பட்டிருக்கும் கயிற்று வேலி வரைக்கும் பல பெண்கள் துர் ஆவி வசப்பட்டு துள்ளிக் குதிக்கும் அவலக் காட்சியைக் கண்டு, நாம் கண்கலங்கி நிற்கிறோம்.

அசுர வேகத்துடனும், ஆவேசக் கூக்குரலுடனும், அந்தப் பெண்கள் தம்மை மறந்து ஆடுகிறார்கள். பெண்கள் குரல்கள் மிரட்டலாகவும், அச்சமூட்டுவதாகவும் ஒலிக் கின்றன. ''என்னை விரட்ட முடியும்னு நினைக்கிறியா? நான் இந்தப் பெண்ணைவிட்டுப் போகமாட்டேன். அவள் மேலே எனக்கு பழைய வழக்கு இருக்கு... அவள் உயிரைக் குடிச்சிட்டுத்தான் நான் போவேன்'' என்று கத்துகிறது ஓர் ஆவி.

''அம்மையே பகவதி! நானும் ஒரு பிள்ளைதான்! எனக்கு அநியாயம் செய்யாதே! இவளைவிட்டு என்னை போகச் சொல் லாதே. நான் போகமாட்டேன்'' என்று கூச்சலிட்டு கூத்தாடுகிறது இன்னோர் ஆவி.

அடுத்த ஆவி வாய் பேசாமல் கண்களை உருட்டி, நாக்கை கோரமாக நீட்டி ஓர் அச்சுறுத்தலான தோற்றத்தை உருவாக்கி பயங்கரமாக ஆடுகிறது.

எதிரே கயிற்றுவேலிக்கு அப்பால் பத்ரகாளியின் சந்நிதியில் பஞ்ச வாத்தியங்கள் ஒலிக்க ஒலிக்க ஆவிகளின் ஆர்ப்பாட்டமும், கூச்சலும் ஆவேசக் குதியாட்டங்களும் அதிகரிக்கின்றன.

எங்கும் சுடர்விட்டு எரியும் தீப்பந்த ஒளியில் அந்த ஆவி வசப்பட்ட பெண்களின் முகங்களில் ஒரு விகாரமான கோரக் களை கனன்று ஒளிர்கிறது.

இந்த ஆர்ப்பாட்டங்களுக்கு இடையே மேல்சாந்தி அமைதியாக பத்ரகாளி சந்நிதியில் பூஜையை முடித்துவிட்டு 'குருதிப் பூஜை'க்குத் தயாராகிறார். ஏழு அண்டாக்களில் குருதி தயாராக இருக்கிறது. குருதி என்றால் இரத்தம். ஆனால், அண்டாக்களில் தயாராக இருப்பது உண்மையான ரத்தமல்ல. அந்த ரத்தத்துக்குப் பதிலாக மஞ்சள் பொடி, சுண்ணும்பு, கதலிப் பழம், சர்க்கரை, நெல்லை உமியோடு பொடி செய்த பொடி அனைத்தையும் ஒன்றாக இட்டு கரைத்த நீர். அதைப்போல அருகில் நிணம் (மாமிசம்) தயாராக இருக்கிறது. அதாவது மஞ்சப் பொடி, அரிசிப் பொடி, நெல் பொடி இவற்றுடன் சுண்ணும்பும் சேர்ந்து, அடுப்பில் வைத்து சூடாக்கி—அது திரட்சியானதும் வைக்கப்படுவது. இந்த ஏற்பாடு முந்திய காலத்தில் அங்கு மிருகபலி நடந்ததற்குத் தற்போதய மாற்று ஏற்பாடு.

இந்தச் செயற்கைக் குருதியை பத்திரகாளியின் உற்சவ சிலைகளுக்கு வாரி இறைக்கிறார் மேல் சாந்தி. அதேபோல் நிணத்தையும் வாரி இறைக்கிறார். அப்படி இறைத்துக் கொண்டே பஞ்சாக்கினி மந்திரத்தையும் ஜெபிக்கிறார்.

அவர் மந்திரத்தை ஜெபிக்கத் தொடங்கியதும், பைசாச ஆவி பிடித்த பெண்களின் கோலமும், ஆர்ப்பாட்டமும் அதிகமாகிறது.

அதுசமயம் அங்கே ஓர் திகைப்பூட்டும் காட்சி...

வழக்காடு மன்றத்தில் நீதிபதியிடம் வாதியும் குமுறுவான்; பிரதிவாதியும் குமுறுவான். இருவருமே ஆர்ப்பாட்டமான குரல் எழுச்சியுடன் தம்தம் பக்கத்து நியாயங்களை எடுத்துச் சொல்வார்கள்.

சுற்றி நிற்போருக்கு எந்தப் பக்கத்தில் நியாயம் இருக்கிறது என்று சுலபத்தில் கண்டுபிடிக்க முடியாது.

ஏனென்ருல், ஒவ்வொருவர் கூறும் வாதத்திலும் அனுதாபத்துக்குரிய ஒரு நியாயம் இருக்கும்.

இந்த நியாய வாதங்கள் மத்தியில் எது உண்மையான தருமமோ அதைக் கண்டு கொண்டு நீதி வழங்குவதுதான் நீதிபதியின் கடமை.

''சோட்டாணிக்கரை தலத்தில் அன்னே பகவதி அப்படி ஒரு நீதிபதியாக அங்கு எழுந்தருளி—பிணியுற்ருேர்க்கும், பேதைமை மாந்தர்க்கும் நீதி வழங்கிக் கொண்டிருக்கிருள்.

அந்த சன்னிதானத்தில் அன்ருடம் நடக்கும் நியாய தர்க்க வாதங்கள் அபூர்வமானவை. அங்கே கீழக்காவு சந்நிதியில் குருதி பூஜையின் போது அன்னே பகவதியின் முன்ஞல் நடக்கும் வழக்கு சற்று அமானுஷ்யமானது. ஏனென்ருல், அங்கே வாதங்களில் ஈடுபடுபவர்களில் ஒருவர் பாதிக்கப்பட்ட மனித ஜென்மம்; அடுத்தது பாதித்துக் கொண்டிருக்கும் துர் ஆவி...

அபலேப் பெண்களேப் பிடித்திருக்கும் ஆவிகள், தாம் அப்படி பிடித்திருப்பதற்கு உரிய காரணங்களேச் சொல்லி, நான் அந்த உடலில் தான் இருப்பேன். என்னே விரட்டாதே என்று அம்பாளிடம் முறையிடுவதும்—

பாதிக்கப்பட்ட பெண்ணேச் சார்ந்தோர் அந்த அபலேப் பெண்ணுக்காக உயிர்ப் பிச்சைக் கேட்டு அம்பாளிடம் மன்ருடுவதும்—

கிட்டத்தட்ட ஒரு 'ருத்ர போர்க்களமாக'வே தோன்றுகிறது. அந்த பத்ரகாளி சந்நிதியில்

திடீரென்று அந்தப் பெண்கள் கூட்டத்திலிருந்து ஒரு பெண்—அன்று காலேயில் நம்மிடம் ஆலயப் பணியாளர் மேனஞல் சுட்டிக்காட்டப்பட்ட அந்தப் பெண்—கூச்சலுடன் தரையில் விழுந்து புரளுகிருள், ஓங்காரக் கூச்சலுடன். கூடவே, ''மாட்டேன்...மாட்டேன்'' என்று அலறுகிருள்.

அதைத் தொடர்ந்து நம்மைத் திகைப்பில் ஆழ்த்தும் வண்ணம் அவளே தொடர்ந்து, ''நீ போய்த்தான் ஆக வேண்டும். நான் உன்னே விடமாட்டேன்'' என்கிருள்.

அந்தக் குரல் சற்று வித்தியாசமாக இருக்கிறது. ''மாட்டேன்'' என்று சொன்ன பெண்ணே, ''நீ போய்த்

தான் ஆக வேண்டுமென்று சொல்கிறாளே'' என்று வியப்புடன் பக்கத்தில் இருந்தவரிடம் விசாரிக்கிறோம். அவர் பதில் கூறுகிறார்:

''இப்போ பேசியது பகவதி அம்பாள். அந்தப் பேயோடு பேசுகிறாள்'' என்கிறார்.

நாம் மலைப்புடன் அம்பாளுக்கும்—அந்தப் பைசாச ஆவிக்கும் இடையே நடக்கும் பேச்சு வார்த்தைகளைக் கவனிக்கிறோம்.

அது அமானுஷ்ய குரலில் மிக உக்கிரமாக நிகழ்கிறது.

ஆவி பலவித காரணங்களைச் சொல்லிச் சொல்லி சில சமயம் அழுகிறது. சில நேரம் ஆவேசமாகச் சிரிக்கிறது. அந்த ஆவி வாழ்ந்த காலத்தில் சிலர் கொடுமை செய்ததாகவும், அந்தக் கொடுமை காரணமாக அது தற்கொலை செய்து கொண்டு இறந்ததாகவும் சொல்லி அழும்போது, அப்போது அம்பாள் குரல் அதைத் தேற்றுகிறது......

''நீ உன் விதிப்பயனை அனுபவித்தாய். அதற்காக இந்தப் பெண்ணை நீ துன்புறுத்துவது நியாயமில்லை. அதற்கு நான் அனுமதிக்க மாட்டேன். நீ இந்தப் பெண்ணை விட்டு வெளியே போய்த்தான் ஆகவேண்டும்'' என்று அழுத்தந் திருத்தமாக ஆணையிடுகிறது அம்பாளின் குரல்.

ஆனால் ஆவியோ, லேசில் மசிவதாக இல்லை. ''இந்தப் பெண்ணைச் சேர்ந்தவர்கள்தான் என்னைக் கஷ்டப்படுத்தினார்கள். நான் பட்ட வேதனையை இந்தப் பெண்ணும் பட வேண்டும். நீ நியாயம் சொல்லுகிற தெய்வமாக இருந்தால் என்னைத் தொந்திரவு செய்யாதே...'' என்று கூறிவிட்டு அழுகிறது.

அவளுடைய அழுகை கிட்டத்தட்ட பத்து நிமிட நேரம் தொடர்கிறது. அந்த அழுகையின் வேகம் படிப்படியாகக் குறைந்து சுற்றி நின்றோரின் அனுதாபத்துக்குரியதாகியது. அது துர்ஆவியின் பரிதாபமான தீனக்குரல் என்று நம்மால் புரிந்து கொள்ள முடிகிறது.

தீனக்குரலில் விசும்பிக் கொண்டே, ''அம்மா, நீ சொல்கிறபடி நான் இந்த உடம்பைவிட்டுப் போய் விடுகிறேன். எனக்கு ஒரு நற்கதி காட்டு'' என்று புலம்புகிறது அது.

அந்தப் புலம்பலின் இறுதியாக அந்த ஜீவனே அம்பாளை துதித்து, ''அம்மே நாராயணா, அச்சே நாராயணா, பத்ரே நாராணா, தேவி நாராயணா'' என்று திரும்பத் திரும்ப குமுறி இறைஞ்சுகிறது. அதைச் சுற்றி நிற்கும் நம் உள்ளமும் உட லும் ஒரு சேர சிலிர்க்கின்றது.

நம்மையறியாமல் நம் கண்கள் நீரைக் கொட்டுகின்றன.

அந்த ஜீவனின் அபயக் குரல் அம்பாளின் திருவுள்ளத் திலும் நெகிழ்ச்சியை ஏற்படுத்திவிட்டது போலும்.

மறுகணம் அப்பெண்ணின் முகத்தில் அபூர்வ தெய் வாம்சக்களை ஒளி வீசுகிறது. அம்பாளின் குரல் அப் பெண்ணின் வாய் வழியே ஒலிக்கின்றது.

''மகளே, உன் துயரத்தை என் காலடியில் போட்டு விடு. நான் உன்னை ஏற்றுக் கொள்கிறேன். நான் உனக்கு நற்கதி அறிக்கிறேன். நீ இந்த மனித ஜீவனை விட்டுவிடு!''

—இக்குரல் கேட்டதும் மீண்டும் அப்பெண்ணின் முகத்தில் கண்ணீர். இது கடைசி முறையாக அப்பெண் வடிக்கும் கண்ணீர். அந்தக் கண்ணீரினூடே ''அம்மே, எனக்கு வழி காட்டு...நான் போய்விடுகிறேன்'' என்கிறது அந்த ஆவி. மீண்டும் பெண் மூலமே அம்பாள் குரல் ஒலிக்கிறது.

''எத்தனை ஆணி வேணும்னு நீயே முடிவு செய்து கொண்டு, அந்த ஆணியாலே அதோ இருக்கிற பலா மரத் திலே அறைஞ்சு அதிலே பதிவாயிடு. நான் உன்னை ஏற்றுக் கொள்வேன்.''

அப்பெண்ணிடம் சில இரும்பு ஆணிகளைக் காட்டுகிறார் கள். அந்தப் பெண் மூன்று ஆணிகளை எடுத்துக் கொண்டு அம்பாளின் சந்நிதிக்கு வலப்புறமாக இருக்கும் பலா மரத் திற்கு அருகே செல்கிறது. அதைப் பிரதட்சணமாக சுற்றி வந்து வணங்கிக் கொண்டே ஆணியைத் தன் கையினாலேயே அந்தப் பலாமரத்தில் அடிக்கிறது.

அங்கே அந்த மரத்தில் அதற்குமுன் நூற்றுக்கணக்கான ஆணிகள் அடித்து அறைப்பட்டு இருக்கின்றன. அவை யெல்லாம் ஏற்கனவே அம்பாளின் கட்டளைப்படி பலா மரத் தில் ஆணி அடித்து, அம்பாளின் திருப்பாதங்களில் சேர்ந்து விட்ட ஆவிகள் எண்ணிக்கைக்குச் சான்றாக உள்ளது.

இந்த ஆவியும் அதைப் போல் பலா மரத்தில் ஆணி அடிக்கிறது. ஆணி சரியாக இறங்காத போது, அந்தப் பெண் தன் நெற்றியாலேயே ஆணியில் மோதி ஆணியை பலா மரத்துக்குள் இறங்கச் செய்தபோது, நம் உள்ளம் கசிந்துருகியது. காரணம் ஆணியை நெற்றியால் மோதி இறக்கிய போது நெற்றுயிலிருந்து 'குபுகுபு'வென்று ரத்தம் கசிந்து ஓடியது.

ஆணி அறைந்ததும் அப்பெண் மயங்கிக் கீழே சாய் கிருள். அப்போது அவள் முகத்தில் அந்த அமானுஷ்ய பைசாச களையுமில்லை. தேவி பகவதியின் அருளாவேசக் களையுமில்லை. தேவியின் அருள் பெற்ற அபலைப் பெண்ணின் தெளிந்த முகத்தை அவளிடத்தில் காண்கிருேம்.

இந்த அற்புதத் திருக்காட்சியைக் கண்டு கண்கள் பனிக்க அன்னை பகவதியின் பேரருள் அமுதச் சுவையில் திளைத்து மருகி கையெடுத்துப் போற்றி செய்கிருேம்,

நம் உள்ளத்தின் ஒவ்வொர் அணுவும் புல்லரித்தப். பரவசப் பெருக்கால் பொங்கிப் பூரித்து அன்னையின் திரு வருளில் கரைந்து உருகுகிறது.

''அம்மே நாராயணு, பத்ரே நாராயணு, தேவி நாராயணு, லட்சுமி நாராயணு'' என்ற தாரக மந்திரம் அணுவுக்குள் அணுவாய் நம்முள் நிறைந்து வியாபகமாகி உள்ளமெல்லாம் பரவசப் பெருக்காய் நிற்கிறது.

மாயப் பிணிகளுக்கும். மாந்தர் செய் ஏவல்களுக்கும் மாற்ருய், மருந்தாய் மாறி நிற்கும் கற்பகமே, நேயமுடன் எமைக் காக்க இந்த நீள் நிலத்தில் எழுந்தருளி, நித்திலமாய் ஒளிவீசி, நித்தம் நித்தம் 'அருள் சுரந்து, ஆயநாள் முதல் இந்த அவனிதலத்துக்கோர் அருள் விளக்காய் அடிய வரை அணைத்து நிற்கும் அம்பிகையே' அருள் பொருளே.

ஆதித்திருச்சுடரே, ஜோதித் திருவே, சோட்டானிக் கரை நிற்கும் சுந்தரியே பகவதியே, காலமெல்லாம் நின் பாதம் 'கைதொழுது சரணடைந்தோம். காசினியில் எனை. காப்பாய் கருணையொளி, கனகதேவி.

அருள் சாம்ராஜ்யம் என்ருல் என்ன?

அன்னையின் சந்நிதியில் அதற்கு விளக்கம் கிடைக்கிறது.

சோட்டானிக்கரைத் தலத்தில் ஒவ்வொருநாளும் விழாக் கோலத்துடன் திருநாளாகவே பிறக்கிறது; நிறைகிறது.

---

அதன் பிராகாரங்கள் பக்தர்களாலும், தம் பிணியகற்ற அம்பாளைக் கோரி விரதமிருப்பவர்களாலும் நிறைந்து பக்திப் பெருமணம் கமழ்ந்து பொலிகிறது.

ஆலயங்களில் பொதுவாக நம்முடைய கோரிக்கையை அம்பாளிடம் தெரிவித்துவிட்டு, அவள் கருணை நமக்குக் கிட்டும் என்ற நம்பிக்கையுடன் அவள் மீது நம் பாரத்தை ஒப்படைத்து விட்டு, இல்லத்துக்குச் செல்வது தான் நம் இயல்பு. ஆனால் சோட்டாணிக்கரைத் தலத்திலோ, தரிசிக்கச் செல்லும் போதே அன்னையை வேண்டுவதோடு, காரியம் சித்தியாகி அவள் கருணையின் பயனையும் பெற்றே திரும்புவது இன்றும் உள்ள விசேட நடப்பு.

ஆம், அங்கு செல்லும் பக்தர்கள் தம் உள்ளக்குறை நீங்க ஆலயத்தில் விரதமிருந்து, அக்குறை நீங்கிய பின்னரே ஆலயத்தை விட்டு நீங்குகின்றனர்.

விரதமிருக்கும் முறையைத் தெரிவிக்குமாறு கேட்டு எனக்கு சில அன்பர்கள் கடிதமெழுதியிருக்கிறார்கள்.

விரதமிருக்கும் முறை பற்றி ஆலயத்திற்குச் சென்று அங்கு பூஜை செய்யும் மேல் சாந்தியையோ, ஆலயமேலாளரையோ விசாரித்தால் தக்க விளக்கம் கிடைக்கும். எனினும் அன்பர்கள் தக்க ஆயத்தங்களுடன் செல்வதற்காக சில முக்கிய குறிப்புகளை இங்கே கூறுகிறேன்.

* * *

ஆலயத்தில் விரதமிருப்பவர்கள் (பஜனம்) ஆலய எல்லைக்குள்ளேயே தங்க வேண்டும். தங்குவதற்குத் தக்க வசதிகள் ஆலயத்தில் உண்டு. பிணியாளர்களுக்கான குடும்பத்தினர் அனைவருமே சேர்ந்து விரதமிருக்கிறார்கள். அவர்கள் காலையில் நாலரை மணிக்கு முன்னாலேயே எழுந்து நீராடி விடியற்காலை பூஜைக்குச் சந்நிதி செல்ல வேண்டும். சந்நிதியில் நடக்கும் அத்தனை பூஜை காலங்களிலும் அவர்கள் கலந்து கொள்ள வேண்டும். ஆலயத்திலேயே விநியோகிக்கப்படும் உணவைத்தான் உண்ண வேண்டும். வெளியே ஓட்டல்களிலோ, தனிச்சமையல் மூலமாகவோ பெறத்தக்

உணவுகளைப் புசிக்கக்கூடாது. விரதகாலம் முடியும் வரை ஆலயத்தை விட்டு வெளியே செல்லக் கூடாது. சதகாலமும் தேவி பகவதியின் சிந்தனையிலேயே தம்மை ஈடு படுத்திக் கொண்டிருக்க வேண்டும். குடும்பப் பிரச்சினைகளிலோ மற்ற உலகியல் சிந்தனைகளிலோ தம் மனம் அலைபாயாதபடி நிச்சிந்தையாக விரதமிருப்பது மிகவும் முக்கியம். அதற்காக தக்க முன்னேற்பாட்டுடன் விரதமிருந்து வருவது மிக முக்கியம்.

முற்காலத்தில் ஆலயத்தின் மேலக் கோபுரத்தைத் தாண்டி யாரும் வெளியே செல்லக் கூடாது என்ற கட்டாய மான விதி இருந்ததாம். ஆனால் இப்போது, அந்த விதி அத்துணைக் கடுமையாகக் கடைப்பிடிக்கப்படுவது இல்லை. ஆனால் அப்படிக் கடைப்பிடித்தால் விரதத்தின் மகிமையும் சக்தியும் அதிகமாகி நினைத்த கோரிக்கைகள் குறித்த காலத்தில் நிறைவேறுமாம். அதற்குக் காரணம், மேலக் கோபுரத்தைத் தாண்டி வெளியே செல்லாவிட்டால் வேறு பிரச்சினைகளோ, பிறர் கூறும் செய்திகளோ மனதில் கலக் காமல் உள்ளம் நிர்மலமாக இருக்கும். அந்த மனத்தில் அன்னை பகவதியைப் பற்றிய சிந்தனை மாத்திரமே இடம் பெற்றிருக்க வாய்ப்புண்டு. மனக் கட்டுப்பாடு விரதத்தின் வெற்றிக்கு மிகவும் அத்யாவசியமான அடிப்படை.

'நைவேத்தியங்களும், பூஜைகளும் மட்டுமே அன்னையின் அருளைப் பெற பயன் தராது. உள்ளத்தால் தேவியைப் பற்றி நிற்பது ஒன்றே அவள் கருணையைப் பெற வழி, என்பதுதான் இத்தலத்தில் கூறப்படும் வழிபாட்டு அனுஷ் டானம்.

நாளெல்லாம் திருவிழாவாக இருப்பினும், ஆண்டு தோறும் சோட்டானிக்கரை தலத்தில் மாசி மாதம் நடக்கும் திருவிழா ஓர் அற்புத மகோற்சவம்.

இத்திருவிழா கும்ப மாதத்தில் (மாசி) ரோஹிணி நட்சத்திரத்தன்று ஆரம்பமாகிறது. தொடர்ந்து வரும் உத்திர நட்சத்திரத்தன்று நிறைவு பெறுகின்றது. விழாக் காலத்தில் ஒவ்வொரு நாளும் தேவி பகவதி தீர்த்தமாடி திருவுலா வருவது கண்கொள்ளாக் காட்சி. விழா காலங் களில் சோட்டானிக்கரைத் தலத்தில் அம்பாள் திருவுலா வாகப் புறப்பட்டு அருகிலுள்ள கிராமங்களுக்கெல்லாம் விஜயம் செய்து மக்களுக்குத் தன் கருணையமுதை வழங்கி வருகிறாள்.

மகம் நட்சத்திரத்தன்று அம்பாளைத் தரிசிப்பது மிக உன்னதமான நற்பலன்களை அளிப்பதாக அத்தலத்தில் ஒரு மகிமை. இந்த மகம் திருவிழா ஒரு மாதர் திருவிழா.

அன்று பிற்பகல் இரண்டு மணியிலிருந்து விசேஷ அலங்காரங்களுடன் அம்பாள் கொலுவிருப்பாள். தூர தூர இடங்களிலிருந்து எல்லாம் ஆயிரக்கணக்கான பெண்கள் வந்து அம்பாளின் அருளைப் பெற்றுச் செல்லும் கருணைத் திருநாள் அது. அது வில்வ மங்கள சுவாமிகளுக்கு அம்பாள் காட்சியளித்த திருநாள்.

திருவிழாக் காலங்களிலும் சரி பூஜா காலங்களிலும் சரி அம்பாள் திருக்கோயிலில் பக்தி செய்யும் மாந்தரின் பாங்கையும் பதவிசையும் கண்டு ஒரு அபூர்வ மனக் கிளர்ச்சியை அடைந்தேன் நான்.

பூஜா நெறிகள் அனைத்து தலங்களிலும் உண்டு. ஆனால், அந்த நெறிகளை உள்ளார்த்த பக்தி ஈர்ப்புடன் செம்மையாக நிறைவேற்றும் பாங்கு கேரள பூமியிலேயே ஒரு வசிகரமான பக்திப் பண்பாடு. ஒரு புதிய ஊர்வுடன் நீராடி, நியமம் காத்து தெய்வத்தை உள்ளார்ந்த ஈடுபாடுடன் வழிபடும் கேரளமக்களின் பக்தியுணர்வு ஓர் அரிய திருக்காட்சி.

அந்தப் பக்திப் பெருக்கால்தானோ, என்னவோ, கொண்டாடும் இடத்தில் தெய்வம் காலத் திருக்காட்சி அருள்வதைப் போல, இந்த மலையாள பூமியில் அம்பாளின்கருணைத் திருவிளையாடல்கள் உச்சிதமான அற்புதங்களுடன் வெளிப்படுகிறது.

பிள்ளையின் திருவிடத்தில் அன்னை மகத்தான பெருமிதத்துடன் கொலுவிருப்பதுபோல், தன் பிள்ளையான பரசுராமர் உருவாக்கிய கேரளத்திருநாட்டில் தேவி பகவதி வேறு எங்கேயும் காணாத அபூர்வ அதிகயங் களுடன் கருணை பொழிவது அங்கு செல்லும் மக்களின் பக்திப் பண்பாட்டால் விளைந்து கனியே என்று தான் தோன்றுகிறது.

அதனால்தான் சோட்டாணிக்கரை தலத்தில், அன்னை பகவதி வாழும் உயிர்களின் பிணியெல்லாம் அகற்றி அவர் தம் வாழ்வில் வளம் கொழிக்கச் செய்து அற்புதம் புரிகிறாள் என்பதோடு—

அந்தப் பரசுராம தேசமாம் கேரளாவில் உள்ள செங்கனூர் திருத்தலத்தில் அன்னை பகவதி ஒரு வாழும் தெய்வமா

கவும் நிலை பெற்றிருக்கிறாள். சாமான்ய மாந்தர் மத்தியில் பிரசன்னமாகியிருக்கும் செங்கனூர் பகவதி, மற்ற மனுக்குலத்து மாதர் போலவே சில விசேட திருமேனிச் சம்பவங்களுக்கும் இடம் தந்து திருப்பூத்து எய்தி நிற்கும் கோலம் வேறு எங்கு காண்போம்.



### பகவதியம்மன் பாமாலை

அம்மே நாராயணா! தேவி நாராயணா!
பத்ரே நாராயணா! லட்சுமி நாராயணா!
பத்தும் பறந்தாலும் பற்று வைக்க நீயுண்டு!
பித்தம் பிறவினைகள் பிணிய கற்ற தாயுண்டு!
சத்து சதமளிக்க சந்நிதியில் காவலுண்டு,
பத்ரே பகவதியே பற்ற நின் பாதமுண்டு!
நித்தம் படி சேர்ந்து நேமிசங்கள் கோடித்து
கைத்தாளம் அத்தாளம் கணக்கறியா பூஜையுடன்
வாத்தியங்கள் முழங்க வந்தித்தோம்! காத்திடுக,
சோட்டானிக்கரை நின்ற சுடரொளியே பகவதியே!
மந்திரங்கள் தந்திரங்கள் மலிந்துவிட்ட பூமியிலும்
சுந்தரமாய் நீயேந்தும் சூலமல்லோ ஆட்சி செய்யும்!
மலையாள தேசம் நின்று மனையாளும் பகவதியே!
நிலைபிறண்ட மதலையர்க்கே நின்னருளே காவலம்மா!
பிள்ளையழுத கண்ணீர் பெருமாட்டி பார்த்திடுவாய்!
தொல்லை மிகக் கொண்டு துவண்ட ஜனம் நின் சரணம்!
சொல்லெலாம் மந்திரமாய் சோட்டானிக்கரை நின்றிடினும்,
எல்லைப் பிரிவினைகள் எதம்மா உன்னருளில்!
நெருப்பான சத்தியங்கள் நிலைபெற்ற பூமியம்மா!
அறங்காக்கும் தத்துவங்கள் ஆண்டமைந்த தேசமம்மா!
ஆதியொளி சங்கரமும் அவதரித்த சீமையம்மா!
ஏதிலார் விதிமாற்ற நீ எழுந்து நிற்கும் எல்லையம்மா!
ஜோதி பகவதியே! சொவ்விளங்கும் நாயகியே!
நீதியொன்று செய்திட்டாய், நெடும் பூமி காத்திடவே!
சோர்ந்தோர், சுகமிழந்தோர் சோட்டானிக்கரை கண்டிட்டால்
தேர்ந்திடுவார் தெளிவுறுவார், தேவி உன் காவலம்மா!
மேற்குக் கடலோரம் மெய்யொளியாய் நிற்பவளே!
பார்க்கும் திசைமுட்ட பரந்திட்ட பல்வினைகள்
தீர்க்கும் திரிசூலம் திருக்கரத்தில் காவலம்மா!

யார்க்கும் குடியெல்லோம் என் தாயே நீயல்லால்!
பாட்டால் தொழுவாரும் பரதவித்து உழல்வாரும்
கேட்டால் நின்பெயரை, கெடுவினை மீண்டிடுவார்!
நாட்டார் நலம் காண, நாதத்தில் ஒளிர்பவளே,
சோட்டானிக்கரை நிற்கும் சுந்தரமே, பகவதியே!
ஊற்றுப் பெருக்காய் உலகாளும் பகவதியே,
நேற்றுக்கும் இன்றுக்கும் நேர்நின்ற காவல் நீ!
ஆற்றுப் படுகையென அருள் செழிப்பாய் உயிர் காக்க
வீற்றிட்டாய் வேதபுரி! வெற்றித்திரு நாயகியே!
அகம் பிறழ்ந்தார் அறம் பிறழ்ந்தார்—அகந்தையினுல்
ஜெகமழிப்பார் செருக்கடக்க மாமருந்தாய்
தேட்டம் உனையெல்லால் தேடுதற்கு யாருமுண்டோ?
சோட்டானிக்கரை அமர்ந்த சொற்பொருளே,
வித்தசியே!
வேற்றுப் பிரிவுகளால் விழ்ந்துபடும் மாந்தரினம்
நேற்றின்று காலமெலாம் நேமிசமாய் நோன்புகளைக்
காத்துநின் கழல் பற்றில், காத்தருள் உனையன்றி
மாற்றுண்டோ மருந்துண்டோ மாதாவே, பகவதியே!
ஆற்ருெணு அல்லல்களில் அமிழ்ந்துருகும் கோடி ஜனம்
தேற்றவொரு புகலின்றி தேடிவரும் சந்நிதியில்
ஏற்றங்கள் அருளவென எழுந்திருக்கும் என் அம்மே,
சோட்டானிக்கரை மலர்ந்து ஜொலித்துநிற்கும்
பகவதியே!
நாட்டார் நகரத்தார் நாலுநிலம் வாழ்ந்திட்டார்,
தேட்டால் வினைசேர்ந்து தீமையினுள் மூழ்கிவிட்டால்
வாட்டாது நலன் சேர்க்க, வாழ்வரசி வீற்றிட்டாள்,
சோட்டானிக்கரை தலந்தன்னில்! சோர்வேன்,
சோதரரே!
நின்ருர் நிலம் சேர்ந்தார் நெய்துவிட்ட கோர வினை
அன்றன்று தீர்த்து ஆகுகின்ற நாயகமே!
என்றும் நின் பதிநாடி ஏழைக்குலம் கையேந்த
நன்றெலாம் நல்கி நமைக்காக்கும் பகவதியே!

பொன்—பாஸ்கர மார்த்தாண்டன்.

## ''மோஹினி கவசம்''

[இதை பக்தியோடு படிப்பவரிடம் எதிரிகள் அஞ்சுவர். தீ அபாயம், சிறை தண்டனை, ஜலகண்டம் முதலியன நிவர்த்தியாகும்.

பூதப் ப்ரேத பைசாசங்கள் விட்டு விலகி ஓடும். நவக்கிரக தோஷம் நீங்கும். உத்யோக உயர்வும், வியாபார விருத்தியும் ஏற்படும். மோஹினி உடன் இருந்து நாம் கோரும் காரியத்தை முடித்து வைப்பாள்]

1. பகவன் ஸர்வ தர்மஜ்ஞ ஸர்வாகம விஸாரத |
கவசம் தேவதாயாஸ்து க்ருபயா கதய ப்ரபோ ||

[அனைத்து தர்மங்களையும் அறிந்தவரே, எல்லா ஆகமங்களிலும் வல்லவரே, என்ப்ரபு! கடவுளே! மோகினி தேவதை எப்படி எங்களைக் காப்பாள் என்பதை தயவு செய்து விளங்கக் கூற வேண்டும்]

2. ப்ரஹ்மோவாச—
ஸ்ருணு தேவ மஹா ப்ராஜ்ஞ ஸர்வ சாஸ்திர விசாரத |
கவசம் மோஹினீ தேவ்யா மஹா ஸித்திகரம் பரம் ||

[நான்முகன் கூறத் தொடங்கினர்:—

புத்தியில் சிறந்த தேவா! சாஸ்திரங்களை அறிந்தவனே! சிறந்த ஸித்திகளைக் கொடுக்கக்கூடிய மோகினி தேவியின் கவசத்தைக் கவனமாகக் கேள்]

3. மோஹினீ மே ஸிர: பாது பாலம் நேத்ரயுகம் ததா |
ப்ருவெள ச காமினீ ரக்ஷேன் முகம் வாகீஸ்வரீ ததா ||

[தலையையும், மூளையையும், நெற்றியையும், இரு கண்களையும் மோகினியான அம்பிகை காப்பாற்ற வேண்டும். இரு புருவங்களைக் காமினியும், முக அழகை வாகீஸ்வரியும் காப்பாற்ற வேண்டும்.]

4. ஸ்ரோத்ரே மங்கள ரூபாச கண்டம் மஹிஷ மர்தினீ
புஜென ஸெளந்தர்ய நிலயா ஹஸ்தெள ரக்ஷேத்ய ஸஸ்வினீ ||

[செவிகளை மங்கள ரூபிணியும், கழுத்தை மஹிஷாசுர மர்த்தனியும், இரு தோள்களையும் சௌந்தரவல்லியும், இரு கைகளை யசஸ்வினியும் காப்பாற்றுங்கள்]

5. ஸர்வதா நாபி தேஸேது கமலா பாது சோதரம் |
விஜயா ஹ்ருதயம் பாது கடிம் ஸுரவரார்சிதா ||

[தொப்புளையும், வயிற்றையும் கமலாதேவியும், விஜயா இருதயத்தையும், இந்திரனால் பூஜிக்கப்பட்ட துரந்தரி இடுப்பையும் காக்க வேண்டும்]

6. கரௌ மஹாலயா ரக்ஷேதங்குளீர் பக்த வத்ஸலா |
வைஷ்ணவீ பாது ஜங்கேச மாயா மேட்ரம் குதம்
ததா ||

[மஹாலயா தொடைகளையும், வத்ஸலா கை விரல் களையும், வைஷ்ணவி ஆடு சதைகளையும் மாயா ஆண் (பெண்) குறியையும், மலத்துவாரத்தையும் காத்து ரட்சிக்க வேண்டும்]

7. பாதௌ ச தேவ ஜனனீ தலம் பாதாளவாஸினீ |
பூர்வே து மோஹினீ ரக்ஷேத் தக்ஷிணே ஸுகதாயினீ ||

[இரு கால்களையும் தேவ ஜனனீயும், பாதாளத்தில் வசிக்கும் பரதேவதை பாதங்களையும் காக்க வேண்டும். கிழக்கு திசைகளில் உள்ள துர்தேவதைகளிடமிருந்து மோகினியும், தெற்கு திசை யட்சிணிகளிடமிருந்து சுகன் யாம்பிகையும் காத்தருள வேண்டும்;

8. பஸ்சிமே வாருணீ ரக்ஷேத் உத்தரே அம்ருத வாஸினீ |
ஈஸான்யாம் பாது சேஸானீ அக்னேய்யா
மக்னிதேவதா ||

[மேற்கு திசையில் வாராஹி தேவியும், வடக்கில் அமிருத வதனியும், வடகிழக்கு திசையில் ஈசுவரியும், தென் கிழக்கில் நெருப்பாய் விளங்கும் பகவதியும் காக்கட்டும்.]

9. நைர்ருத்யாம் கட்கத்ருக்தேவி வாயவ்யாம் ம்ருக
வாஹினி—
ஊர்த்வம் ப்ரஹ்மாணீ மே ரக்ஷேத் அதஸ்தாத்
வைஷ்ணவீ ததா ||

(கையில் வாள் ஏந்திய பைரவி தென்மேற்கு திசை யிலும், வடமேற்கு திசையில் சிம்ம வாஹினியும் ஆகாயத் தில் பிரம்மாணியும், பாதாளத்தில் வைஷ்ணவியும் காப்பாற்ற வேண்டும்.)

10. அக்ரத : பாது சேந்த்ராணீ வாராஹீ
ப்ருஷ்டதஸ்ததா |
கௌபேரீ சோத்தரே பாது தக்ஷிணே விஷ்ணு
வல்லபா ||

(முன்பக்கம் இந்திராணியும், பின்புறம் வாராஹியும், இடதுபுறம் கௌரியும், வலது பக்கம் விஷ்ணுவின் உயிராக இயங்குபவளும் காப்பாளாக!)

11. இதம் கவச மஜ்ஞாத்வாயோ பஜேன்
மோஹினீம் நர : |
வ்ருதாஸ்ரமோ பவேத்தஸ்ய ந மந்த்ர
ஸித்திதாயக ||

(மோகினி தேவியை பூஜிக்க நினைப்பவர்கள் இந்தக் கவசத்தைச் சொல்லி பூஜித்தாலே முழுப்பலனும் பெற முடியும்.)

12. பூர்ஜபத்ரே ஸமாலிக்ய குங்குமாதிகசந்தனே |
ஸத மஷ்டோத்தரம் ஜாப்யம் ஸ்வர்ணஸ்த்தம் தார்
யதே யதி ||

(இந்த ஸ்லோகத்தை குங்குமத்திலோ, சந்தனத்திலோ எழுதி நூற்றெட்டுமுறை ஜபித்து தாயத்தில் அடைத்து,)

13. கண்டே வா தக்ஷிணே பரஹாவஷ்ட ஸித்திர் பவேத்
த்ருவம் |
ஸர்வதா ஸர்வதா நித்யம் ஜபேன் மோஹினிகம்
ததா ||

(கழுத்திலோ, வலது கையிலோ அணிந்து கொண்டால், ஆடை ஆபரணங்கள், அஷ்ட சித்திகள் பெறலாம். இது சத்யம். எப்போதும் இதை ஜபிப்பவர்களுக்கு இல்லறத்தில் ஒருநாளும் அச்சமில்லை.)

14. ராஜத்வாரே ஸபாஸ்த்தானே காராக்ருஹ
நிபந்தனே |
ஜலமத்யே சாக்னிமத்யே ததா நிர்ஜனகே வனே ||

(மந்திரி முதலான பிரமுகர்களை காரிய சாதகம் வேண்டி காணச் செல்லும் போதும், சிறையிலிருந்தாலும், நெருப்பில் அகப்பட்டிருந்தாலும், வெள்ளத்தில் தவிப்ப தானாலும், பாலைவனத்தில் தத்தளித்தாலும்,)

15. அரண்யே ப்ராந்தரே கோரே ஸத்ரு ஸங்கே மஹா
ஹவே |
ஸஸ்த்ர காதே விஷே பீதே ஜபன் ஸித்தி மவாப்னு
யாத் ||

16130



(நடுக்காட்டில் அச்சப்பட்டாலும், திருடர்கள், எதிரிகள் நடுவில் மாட்டிக் கொண்டாலும், ஆயுதத்தால் தாக்கப்படும் போதும், போரிலும், விஷம் குடித்திருந்தாலும் இதைப் பாராயணம் செய்தால் உடனே காப்பாற்றப் படுகிறார்கள்.)

16. ப்ரஹ்ம ராக்ஷஸ வேதாளா : கூஷ் மாண்டா
பைரவாத யா : |
நஸ்யந்தி தர்ஸனுத்தஸ்ய கவசே ஹ்ருதி ஸம்ஸ்திதே ॥

(பிரும்ம ராட்சதர்களும், பேய், பிசாசுக் கூட்டங்களும், பைரவ யட்சணி போன்ற துர்தேவதைகளும், கூஷ்மாண்ட க்ருகங்களும் இதை ஜபித்த மாத்திரத்தில் அழிக்கப் படுகின்றன.

17. மனஸா சிந்திதம் கார்யம் ஸஹஸ்ரம் ஜபதஸ்த்தா |
பலாஸமூலே ப்ரஜபேத் ஸஹஸ்ரத்ரிதயம் முதா ॥

(நினைத்த காரியம் நடக்க ஆயிரம் தடவை பாராயணம் செய்ய வேண்டும். புரச மரத்தடியில் (பலாச) மூவாயிரம் தடவை ஜபித்தால்,)

18. ஸத்ருஹானிர்த்ருவம் சாத்ர ஜாயதே நாத்ர
ஸம்ஸய |
அர்க்க மூலேஜபேந்நி த்யம் மந்த்ர ராஜமிமம்
ஸுபம் ॥

(சத்துருக்கள் நாசமடைவது நிச்சயம். எருக்கஞ் செடியின் கீழிருந்து சுபத்தைத் தரும் இந்த ஸ்தோத்திரத்தை அனுதினமும் படித்து,)

19. போஜயேத் ப்ராஹ்மணும் ஸ்சைவ லக்ஷ்மீர்வஸதி
ஸர்வதா |
யதிதம் கவசம் நித்யம் பக்த்யா தவ மயோதிதம் ॥

(பிராம்மணர்களுக்கு சாப்பாடு போட்டால் அவர்களது இல்லத்தில் மகாலக்ஷ்மி நிரந்தரமாக குடி இருக்கிறாள்.

20. யோ ஜபேத் ஸர்வதா பக்த்யா மோஹின்யா :
கவசம் ஸுபம் |
வாஞ்சிதம் பலமாப்னோதி நாத்ர கார்யா விசாரணா ॥

(பக்தியுடன் நான் உனக்குக் கூறிய இந்த மோகினி கவசத்தை பக்தியோடு சதா ஜபிப்பவர்களுக்கு அவர்கள் நினைத்த காரியம் விக்னமின்றி நடைபெறுவது நிச்சயம்.)

ஃ ஃ ஃ

(பவிஷ் யோத்ர புராணத்திலுள்ள பிரம்மா உபதேசித்த மோகினி கவசம் முற்றியது.)

---

